ஸ்ரீ:

திவ்யப் பிரபந்தம்

# பெரிய திருமொழி



பதிப்பாசிரியக் குழுவினரால்
பல பிரதிகளை ஒப்புநோக்கிப் பரிசோதித்து
வெளியிடப்பட்டது

வெளியிடுவோர் :
எஸ். ராஜம்
5, தம்புச் செட்டித் தெரு
சென்னை–1

ஸ்ரீ:

# பெரிய திருமொழி

## பதிப்புரை

திருமங்கை மன்னன் அருளிய ஆறு பிரபந்தங்களுள் இசைப்பாப் பிரபந்தங்களாகிய 'பெரிய திருமொழி', 'திருக்குறுந் தாண்டகம்', 'திருநெடுந் தாண்டகம்' என்னும் மூன்றும், ஸ்ரீமந் நாத முனிகள் அடைவு படுத்திய முறையில், திவ்யப் பிரபந்தத்தின் இரண்டாவது ஆயிரமாக அமைந்துள்ளன. இவற்றுள் முதல் பிரபந்தம் ஆகிய 'பெரிய திருமொழி' என்னும் பெயரை இட்டு இத்தொகுதியையே வழங்குதலும் உண்டு. ஸ்ரீ கூர்மாசாரியர், ஸ்ரீ அப்பாவு முதலியார் முதலிய ஒரு சில பதிப்பாசிரியர்கள் 'திருநெடுந் தாண்டகம்' முடிந்தபின், 'பெரிய திருமொழி முற்றிற்று' என்று குறித்திருத்தல் இதனை விளக்கும்.

அன்றியும், மேற்குறித்த இரு பதிப்பாசிரியர்களும் தந்துள்ள நூல்-இறுதிக் குறிப்புக்களால் இரு தாண்டகங்களையும் பெரிய திருமொழியின் ஓர் அங்கமாகவே கொண்டுள்ளனர் என்றும் துணிய இடமுண்டு. ஸ்ரீ கூர்மாசாரியர் பெரிய திருமொழி முடிவில், 'திருமொழி 108-க்குப் பாசுரம் 1084' என்றும், திருக்குறுந் தாண்டகம் முடிவில், 'ஆக திருமொழி 110-க்குப் பாசுரம் 1104, என்றும் குறித்துள்ளார். திருநெடுந் தாண்டகம் முடிவில், 'ஆக பாசுரம் 1134' என்று மட்டும் காட்டியுள்ளனர். ஸ்ரீ அப்பாவு முதலியார் பதிப்பிலோ பெரிய திருமொழி இறுதியில், 'ஆக திருமொழி 108-க்குப் பாசுரம் 1084' என்றும், திருக்குறுந் தாண்டகம் முடிவில், 'ஆக திருமொழி 109-க்குப் பாசுரம் 1104' என்றும், திருநெடுந் தாண்டகம் முடிவில், 'ஆக பத்து 11-ல் திருமொழி 110-க்குப் பாசுரம் 1134' என்றும் குறிப்பு உள்ளது. இக் குறிப்புக்களால் ஸ்ரீ கூர்மாசாரியர் திருக்குறுந் தாண்டகத்தை இரண்டு திருமொழி ஆகவும், ஸ்ரீ அப்பாவு முதலியார் ஒரு திருமொழியாகவும் கொண்டுள்ளமை புலனும். மேலும், இரு தாண்டகங்களுக்கும் ஆன்றோர்கள் அருளிய தனியன்கள் இன்றி, பெரிய திருமொழிக்கு மட்டும் தனியன்கள் அமைந்திருப்பதால், தாண்டகங்களைப் பெரிய திருமொழியின் ஒரு பகுதியாகவே முன்னையோர் கொண்டனர் என்று கருத இடமுண்டு.

என வரும் பாடலைக் காட்டலாம். இப் பாசுரத்தின் வியாக்கியானத்தில் வரும் செய்தி ஒன்று இங்குக் கவனிக்கத் தக்கது.

> பெருமாளுக்கு வல்லபனாயிருப்பானொரு திருவிளக்குப் பிச்சன் பலரையும் திருமுன்பே க்ஷேபிக்கிற ப்ரகரணத்திலே, ஆழ்வார்களைத் திருவுள்ளமாய், 'நம் பக்தர்களுக்கு ஒரு குறை சொல்லிக் காணாய்' என்று திருவுள்ளமானாராய்; இப் பாட்டை விண்ணப்பம் செய்து, 'நாயன்தே! தேவரைக் கவிபாட என்று தொடங்கி, தம்மைக் கவிபாடிக் கொண்டார்' என்ன, 'அதுவும் நம்மையன்றோ சொல்லிற்று' என்று திருவுள்ளமானார்.

இச் செய்தியால் குறிப்பாக, ஆழ்வார்களுள் இவர் ஒருவரே தேவரைப் பாடிய கவியில் தம்மையும் அறிமுகப்படுத்துகிறார் என்பது தெரியவரும். இது பின்வரும் 'கோயிலொழுகு'ச் செய்தியாலும் வலியுறுதல் காணலாம்.

> திருவிளக்குப் பிச்சனைப் பெருமாள் கடாக்ஷித்து, அவனுடனே நித்தியமாக வினவியருளும் காலத்திலே, ஒரு நாள் திருவிளக்குப் பிச்சனைச் சேதி கேட்டருள, பிச்சனும், திருமங்கை மன்னன் விஷயமாக, 'ப்ரபந்தமுகத்தாலே தேவரைப் பாட நினைத்துத் தன்னைத் தானே துதித்தான்' என்று விண்ணப்பம் செய்யக் கேட்டருளி, 'திருமங்கை மன்னன் செய்தியை நினைக்க வேண்டாம்' என்று நியமித்து, ஆழ்வாரிடத்திலே மிகவும் கிருபையுடனே எழுந்தருளி யிருக்கும் காலத்திலே......

மேற்காட்டியவற்றால் பல-சுருதிப் பாடல்களையும் திருமங்கை மன்னனே பாடியருளினார் என்பது ஐயத்திற்கு இடமின்றி நன்கு தெளிவாம். இதனால் இத் தொகுதியில் பல-சுருதிப் பாடல்களும் ஏனைய பாடல்களுக்குரிய எழுத்தமைப்பில் பதிப்பிக்கப்படுவதாயிற்று.

திருவாய்மொழியைப் போன்றே பெரிய திருமொழியிலுள்ள ஒவ்வொரு திருமொழிக்கும் பண்-தாளங்கள் முன்பு வழக்கத்தில் இருந்தனவாதல் வேண்டும். பின்னர், பெருக வழங்காமையால், அக் குறிப்புக்கள் பெரிய திருமொழி முழுமைக்கும் நமக்கு இப்பொழுது கிடைக்கவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில், முதலிலிருந்து ஏழாம் பத்து ஒன்பதாம் திருமொழி வரையில், இடையில் மூன்று திருமொழி நீங்கலாக (1, 9 ; 3, 3 ; 7, 7) எல்லாவற்றிற்கும் பண்-தாளங்கள் பற்றிய குறிப்பு எழுதப் பெற்றிருந்தது. ஏழாம் பத்து எட்டாம் திருமொழிக்குத் தாளக் குறிப்பு மட்டும் இல்லை. இப் பிரபந்தம் முழுமைக்கும் பண்-தாளக் குறிப்புக்கள் பிற பிரதிகளில்

உள்ளனவா என்று தேடியும், வேறு பிரதிகளில் ஒன்றும் இக்குறிப்புக் காணப்படவில்லை. இந்த ஏட்டில் உள்ள செய்தியும் மறைந்துவிடக் கூடாதே என்ற எண்ணத்தால், பண்-தாளக் குறிப்புக்கள் கிடைத்த வரையில் இப் பதிப்பில் கொடுக்கப் பெற்றுள்ளன.

இப் பிரபந்தம் முழுமைக்கும் பண்-தாளக் குறிப்புக்கள் வியாக்கியாதா காலத்தில் வழக்கில் இருந்தன என்று வியாக்கியானத்தில் வரும் ஒரு குறிப்பால் தெரிய வருகிறது. சங்கத்து ஏட்டில் பண்-தாளம் காணப்பெறாத 8-ம் பத்து 7-ம் திருமொழியின் இறுதிப்பாடலில் வரும், 'விழுமிய இசையினொடு ஒலி சொலும் அடியவர்' என்னும் பகுதிக்கு, 'இத் திருமொழியை வண்குறிஞ்சி என்று சொல்லுவர்கள், இத்தை அப்பியசிக்குமவர்' என்று வியாக்கியானம் செய்துள்ளார்.

மல்லிகை கமழ் தென்றல் ஈரும், ஆலோ ;
வண் குறிஞ்சி இசை தவரும், ஆலோ : (3809)

என ஸ்ரீ சடகோபரும் 'வண் குறிஞ்சி இசை' எனக் குறித்தல் காணலாம். இங்கெல்லாம் 'வண்' என்பது 'குறிஞ்சி' என்பதற்குரிய அடைமொழியே யாகும். 'குறிஞ்சி' என்பதே பண்ணின் பெயர். வியாக்கியானத்தால் இத் திரு மொழியின் பண் நமக்குத் தெரிய வருகிறது. இதனால் வியாக்கியாதா காலத்தில் பெரிய திருமொழி முழுமைக்கும் பண்-தாளம் வழங்கியிருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. இன்னும் பல பிரதேசங்களில் உள்ள பிரதிகளைத் தேடிப் பெற்றால் இசைக் குறிப்புக்களோடு கூடிய பிரதிகள் கிடைத்தாலும் கிடைக்கலாம்.

இத் தொகுதியில் வரும் திருமொழிகளில் பெரும்பாலனவும் திருப்பதிகளைச் சிறப்பித்துப் பாடப்பெற்றனவாம். அகப்பொருள் துறையில் தலைவன் தலைவி தன்மை புலப்படப் பாடிய திருமொழிகளும் இடையிடையே உள்ளன. இத் திருமொழிகளுக்குப் பழம் பதிப்புக்களில் கொடுத்துள்ள தலைப்புக்கள் மிக நீண்டு காணப் பட்டமையால் அவற்றை விடுத்து, புதிய முறையில் தலைப்புக்கள் தரப் பட்டுள்ளன. திருமொழிகளில் குறித்தவண்ணம் திருப்பதிகளின் பெயர்களைத் தலைப்பாகத் தந்தும், அகப் பொருட் செய்தி முதலியன பற்றி வியாக்கியாதா தரும் விளக்கங்களைத் தழுவி உரிய தலைப்புக்கள் இட்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

பெரிய திருமொழியில் சுமார் இருபத்தைந்து இடங்களுக்கு மேலாக, பாட பேதங்களையும் சுட்டிக் காட்டி, அவற்றிற்கும் உரை

வருத்துச் செல்கின்றார் வியாக்கியாதா. இதனால் இப் பாடங்களை அவருடைய காலத்தில் ஆன்றோர்கள் வழங்கி வந்தனர் என்று துணியலாம் ; ஆன்றோர் வழக்கில் இல்லாதவற்றைப் பாட பேதமாக ஒப்புக்கொண்டிருக்கமாட்டார். ஆன்றோர்களும் தம் முன்னோர் வழங்கிவந்த பாடங்களையே போற்றி வந்திருப்பர் ; தாமாக ஒரு பாடத்தைப் புகுத்தத் துணியார்கள். இதனை விளக்கும் நிகழ்ச்சி ஒன்றை வியாக்கியாதா குறிப்பிட்டுள்ளார். 'தவம் புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த கங்கையின் கரைமேல்' (985) என்ற பாசுரப் பகுதியின் வியாக்கியானத்தில் இதனைக் காணலாம். அது வருமாறு :

> தவம் புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த—என்கிறது விஸ்வாமித்திரனை. அவன் க்ஷத்திரியனா யிருக்கச் செய்தேயும், தபோபலத்தாலே ப்ரஹ்மரிஷி ஆனானிறே. அவன் பெருமாளையும், இளைய பெருமாளையும் நடத்திக் கொண்டு வந்தது அக்கரையே ஆகையாலே அத்தைச் சொல்லிற்றாகவும் ஆம். தபஸ்ஸைச் செய்து உயர்ந்த என்றபடி. இதுக்கு ஸ்ரீ பராங்குச தாஸர், 'ஜீயா! மாமுனி புகன்ற என்று பாட பேதத்தைப் பண்ணி, அதினுடைய ப்ரபாவத்தைப் பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடு போர்தானிறே ; அத்தைச் சொல்லிற்றாகவும் ஆமே' என்ன—'அதுக்கு நமக்குப் பலம் போராது' என்று அருளிச் செய்வர்.

இக் குறிப்பிலிருந்து மூல பாடங்கள் வழிவழியாக வழங்கி வருவனவே என்பது பெறப்படும். இப் பதிப்பிலும் வழங்கி வரும் பாடங்களில் வியாக்கியானத்திற்குப் பொருந்திவரும் பாடங்களே பெரும்பாலும் கொள்ளப்பட்டுள்ளன. பிரதிகள் பரிசோதனையால் கிடைத்த பாட ரூப பேதங்கள் இறுதியில் ஒரு தனிச் சேர்க்கையாக அமைக்கப்பட்டுள்ளன.

பாடங்களைத் துணிவதற்குப் பழம் பதிப்புக்களும் பேருதவியாய் இருந்தன. பெரிய திருமொழிக்குக் கிடைத்த பழம் பதிப்புக்களில் மூன்று முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை. முதலாவது கூறத்தக்கது 1856-ல் வெளிவந்த ஸ்ரீ கூர்மாசாரியர் பதிப்பு. இதுவே திவ்யப் பிரபந்தத்திற்கு முதற் பதிப்பாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.* இவர் தமக்குக் கிடைத்த பிரதிபேதங்களை ஒப்பு நோக்கி, காலக்ஷேப பரர் முன்னிலையில், அவர்களின் ஒப்புதலோடு தமது பதிப்பை

---

*இவரது பதிப்பில், 'முதலாயிரம்', 'திருவாய்மொழி'த் தொகுதிகள் கிடைக்கவில்லை. இவற்றை வைத்திருப்பவர்கள் தந்து உதவினால், மறு பதிப்பில் அப் பதிப்புக்களையும் ஒப்பு நோக்கி வெளியிட வசதியாயிருக்கும்.

வெளியிட்டுள்ளார். அடுத்துச் சொல்லத் தக்கது 1865-ல் வெளிவந்த ஸ்ரீ அப்பாவு முதலியார் பதிப்பு. இவர் தமது பதிப்பில் திருமொழி களுக்கு இராக-தாளம் குறிப்பிட்டுள்ளார். மூன்ருவது கூறத்தக்கது 1885-ல் வெளிவந்த ஸ்ரீ ஊ. புஷ்பரதச் செட்டியார் பதிப்பு. இப் பதிப்பு 'வியாக்கியானங்களுக்கு இணங்கப் பரிசோதிக்கப்பட்டு' வெளியிடப் பெற்றதாகும். இப்பொழுது வெளிவரும் இப் புதிய பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகள்-புத்தகங்கள் பற்றிய குறிப்பு பின்-இணைப்பாகத் தரப்பட்டுள்ளது.

பிற தொகுதிகளைப் போலவே, இத் தொகுதியிலும் அருஞ் சொற்களுக்கு உரை விளக்கம் அகராதி அடைவில் அமைக்கப்பட்டுள் ளது. அதனை அடுத்துப் பெரிய திருமொழியில் திருமங்கைமன்னன் மங்களாசாஸனம் செய்தருளிய திருப்பதிகளும், அவற்றிற்கு உரிய பாசுர எண்களும் ஒரு தனி அனுபந்தமாக இணைக்கப்பெற்றுள்ளன.

பிரபந்தத் தொடக்கத்தில் பெரிய திருமொழிக்கு ஆன்ருேர்கள் அருளிய தனியன்கள் தரப்பட்டுள்ளன.

திவ்யப் பிரபந்தத்தின் மூல பாடத்தை நான்கு தொகுதிகளாக வும், பிரபந்தத்தில் வரும் இதிகாச புராணக் கதைகள், ஆழ்வார்கள் வாழ்ந்த வரிசைக் கிரமம், காலம், அரும்பத உரை முதலியன எல்லாம் ஐந்தாவது தொகுதியில் அமைப்பது என்றும் முதலில் திட்டம் செய் திருந்தது. இதனாலேதான் முதலாயிரத்தில் அரும்பத விளக்கம் அமைக்கப்பெறவில்லை. பின்னர், பலரும் அருஞ்சொற்களுக்குப் பொருள் தரவேண்டும் என்று விரும்பியதால், பின் வந்துள்ள தொகுதி களில் அரும்பத விளக்கம் கொடுக்கப்படுவதாயிற்று. தொகுதிகள் தோறும் அரும்பத விளக்கம் கொடுப்பதால் எத்தனையோ பதங்களுக்கு மீண்டும் மீண்டும் பொருள் தரவேண்டுவதாயுள்ளது. இதனால் அரும்பத விளக்கப் பகுதி ஒவ்வொரு தொகுதியிலும் மிக விரிந்த அளவில் இடம் பெற்றுவிட்டது. திவ்யப் பிரபந்தம் முழுமைக்கும் ஒரு சேர அரும்பத விளக்கம் அமைத்தால், இவ்வாறு நேர இடம் இராது. மேலும், 'பாட ரூப பேதங்கள்' ஆராய்ச்சியாளருக்கு உதவும் குறிப்புக்களே தவிர, எல்லோரும் அதனைப் பயன்படுத்தவும் இயலாது. எனவே, திவ்யப் பிரபந்தத் தொகுதிகளின் மறு பதிப்பில் மூல பாடங்களை மட்டும் நான்கு தொகுதிகளில் கொடுத்து, ஐந்தாவது தொகுதியில் அரும்பத விளக்கம், பாட ரூப பேதங்கள், மங்களா சாஸனம் செய்தருளிய திருப்பதிகள், திவ்யப் பிரபந்தக் கதைக் குறிப்

புக்கள், ஆழ்வார்களைப் பற்றிய ஆராய்ச்சிக் குறிப்புக்கள், திருப்பதிகள் பற்றிய விவரக் குறிப்புக்கள், திவ்ய தேச யாத்திரைக் குறிப்புக்கள், யாத்திரைக்கு உதவும் துணைப் படங்கள், பிரபந்த மேற்கோள் குறிப் புக்கள், பிரபந்தம் பற்றிய வேறு பல குறிப்புக்கள், வியாக்கியான கர்த் தர்களைப் பற்றியசெய்திகள் ஆகிய யாவற்றையும் சேர்த்து, அதனை ஓர் ஆராய்ச்சித் தொகுதியாக அமைத்துவிடலாம் என்று கருதியுள்ளோம்.

முன் தொகுதிகளுக்கு உதவிய பதிப்பாசிரியக் குழுவினர் இத் தொகுதிக்கும் உதவி புரிந்துள்ளனர். பதிப்பாசிரியக் குழுவினராகிய ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர், ஸ்ரீ காரப்பங்காடு வேங் கடாசாரியர், ஸ்ரீ வேங்கடராஜுலு ரெட்டியார், ஸ்ரீ பி. ஸ்ரீ, ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஆகிய ஐவர்க்கும் எமது நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

திவ்யப் பிரபந்தப் பதிப்பில், முதலாயிரம் தொடங்கி, பதிப்புக் குழுவில் உடனிருந்து உதவிபுரிந்து வந்த ஸ்ரீ உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் பெரிய திருமொழிப் பாசுரங்கள் அச்சிட்டு முடியும் தறுவாயில் ஆசாரியன் திருவடி அடைந்தது பதிப் புக் குழுவில் ஒரு பெரும் நஷ்டமாகும். பிரபந்தப் பதிப்பில் அச்சுத் தாள்கள் நோக்கித் திருத்தங்கள் உதவியதோடு, அவ்வப்போது பாடங்கள் முதலியன பற்றி நிகழும் ஐயங்களையும் நீக்கிப் பேருதவி புரிந்து வந்தனர். தென்மொழி வடமொழிகளில் பெரும் புலமை வாய்ந்து இலக்கிய விளக்கப் பணிகள் பல புரிந்து வந்த பெரியா ராகிய ஸ்ரீ ஆசாரியர் அவர்களது உதவி திவ்யப் பிரபந்தம் பூர்த்தி பெறும் வரையிலாவது பெற முடிந்தது நமது பெரும் பாக்கியமே.

இப் பதிப்பு வேலையில், பதிப்பாசிரியக் குழுவினரின் கருத்துக்கு இணங்க, பாடல்களைப் பதம் பிரித்து அமைத்தும், பாட ரூப பேதங்கள், அரும்பத விளக்கம் முதலியவற்றைத் தக்க வகையில் தயாரித்து அமைத்தும், பலவகையில் உதவிய வித்வான் மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்கும் எமது நன்றி உரித்தாகுக.

எங்களது இலக்கியப் பதிப்பு முயற்சிகள் யாவும் இடையூறின்றி இனிது நிறைவேற எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருள் பாலிப்பானாக.

மர்ரே அண்டு கம்பெனி<br>சென்னை<br>2—11—'56 } வெளியிடுவோர்

## உள்ளுறை

பக்கம்

பக்கம்

# தனியன்கள்

வாழி, பரகாலன்! வாழி, கலிகன்றி!
வாழி, குறையலூர் வாழ் வேந்தன்! வாழியரோ—
மாயோனை வாள் வலியால் மந்திரம்கொள் மங்கையர்-கோன்,
தூயோன், சுடர் மான வேல்!

நெஞ்சுக்கு இருள் கடி தீபம்; அடங்கா நெடும் பிறவி-
நஞ்சுக்கு நல்ல அமுதம்; தமிழ் நன்னூல் துறைகள்
அஞ்சுக்கு இலக்கியம்; ஆரண சாரம்; பரசமயப்
பஞ்சுக்கு அனலின் பொறி—பரகாலன் பனுவல்களே.

எங்கள் கதியே! இராமநுச முனியே!
சங்கை கெடுத்து ஆண்ட தவராசா! பொங்கு புகழ்
மங்கையர்-கோன் ஈந்த மறை ஆயிரம் அனைத்தும்
தங்கும் மனம் நீ எனக்குத் தா.

ஸ்ரீ:

திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமொழி

## 1, 1

### பெரிய திருமந்திரத்தின் மகிமை

பண் : இந்தளம்  தாளம் : ஒன்பதொத்து

வாடினேன்; வாடி, வருந்தினேன் மனத்தால்;
 பெருந் துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன்; கூடி, இளையவர்-தம்மோடு
 அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன்; ஓடி, உய்வது ஓர் பொருளால்
 உணர்வு எனும் பெரும் பதம் திரிந்து,
நாடினேன்; நாடி, நான் கண்டுகொண்டேன்—
 நாராயணா என்னும் நாமம். 1

ஆவியே! அமுதே! என நினைந்து உருகி,
 அவர்அவர் பணை முலை துணையாப்
பாவியேன் உணராது, எத்தனை பகலும்
 பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்;
தூவி சேர் அன்னம் துணையொடு புணரும்
 சூழ் புனல் குடந்தையே தொழுது, என்
நாவினால் உய்ய நான் கண்டுகொண்டேன்—
 நாராயணா என்னும் நாமம். 2

சேமமே வேண்டி, தீவினை பெருக்கி,
 தெரிவைமார் உருவமே மருவி,
ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய்,
 ஒழிந்தன கழிந்த அந் நாள்கள்;
காமனார் தாதை, நம்முடை அடிகள்,
 தம் அடைந்தார் மனத்து இருப்பார்
நாமம் நான் உய்ய, நான் கண்டுகொண்டேன்—
 நாராயணா என்னும் நாமம். 3

வென்றியே வேண்டி, வீழ் பொருட்கு இரங்கி,
வேல்கணார் கலவியே கருதி,
நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்
என் செய்கேன்! நெடு விசும்பு அணவும்
பன்றி ஆய் அன்று பாரகம் கீண்ட
பாழியான், ஆழியான் அருளே
நன்று நான் உய்ய, நான் கண்டுகொண்டேன்—
நாராயணா என்னும் நாமம். 4

கள்வனேன் ஆனேன்; படிறு செய்து இருப்பேன்;
கண்டவா திரிதந்தேனேலும்,
தெள்ளியேன் ஆனேன்; செல் கதிக்கு அமைந்தேன்;
சிக்கெனத் திருவருள் பெற்றேன்;
உள் எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்:
உடம்பு எலாம் கண்ண நீர் சோர,
நள் இருள் அளவும், பகலும், நான் அழைப்பன்—
நாராயணா என்னும் நாமம். 5

எம்பிரான், எந்தை, என்னுடைச் சுற்றம்,
எனக்கு அரசு, என்னுடை வாழ்நாள்,
அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி,
அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்;
வம்பு உலாம் சோலை மா மதிள் தஞ்சை
மா மணிக் கோயிலே வணங்கி,
நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேன்—
நாராயணா என்னும் நாமம். 6

இல்-பிறப்பு அறியீர், இவர் அவர் என்னீர்,
இன்னது ஓர் தன்மை என்று உணரீர்,
கற்பகம்! புலவர் களைகண்! என்று உலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொல் பொருள் ஆளீர்! சொல்லுகேன், வம்மின்;
சூழ் புனல் குடந்தையே தொழுமின்;
நல் பொருள் காண்மின்; பாடி நீர் உய்மின்—
நாராயணா என்னும் நாமம். 7

கற்றிலேன் கலைகள் ; ஐம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தை ;
பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை ;
பெரு நிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம்
செற்றமே வேண்டித் திரிதர்வேன் ; தவிர்ந்தேன் ;
செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி,
நல் துணை ஆகப் பற்றினேன், அடியேன்—
நாராயணா என்னும் நாமம். 8

குலம் தரும் ; செல்வம் தந்திடும் ; அடியார்
படு துயர் ஆயின எல்லாம்
நிலம் தரம் செய்யும் ; நீள் விசும்பு அருளும் ;
அருளொடு பெரு நிலம் அளிக்கும் ;
வலம் தரும் ; மற்றும் தந்திடும் ; பெற்ற
தாயினும் ஆயின செய்யும் ;
நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்—
நாராயணா என்னும் நாமம். 9

மஞ்சு உலாம் சோலை வண்டு அறை மா நீர்
மங்கையார் வாள் கலிகன்றி
செஞ்சொலால் எடுத்த தெய்வ நல் மாலை
இவை கொண்டு சிக்கென, தொண்டீர்!
துஞ்சும்போது அழைமின் ; துயர் வரில், நினைமின் ;
துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம் ;
நஞ்சு-தான் கண்டீர் நம்முடை வினைக்கு—
நாராயணா என்னும் நாமம். 10

## 1, 2

### திருப்பிரிதி

பண் : முதிர்ந்த குறிஞ்சி தாளம் : ஏழொத்து

வாலி மா வலத்து ஒருவனது உடல் கெட
வரி சிலை வளைவித்து அன்று,
ஏலம் நாறு தண் தடம் பொழில் இடம்பெற
இருந்த நல் இமயத்துள்,
ஆலி மா முகில் அதிர்தர, அரு வரை
அகடு உற, முகடு ஏறி,
பீலி மா மயில் நடம்செயும் தடஞ் சுனைப்
பிரிதி சென்று அடை, நெஞ்சே ! 1

கலங்க மாக் கடல் அரிகுலம் பணிசெய,
அரு வரை அணை கட்டி,
இலங்கை மாநகர் பொடிசெய்த அடிகள்-தாம்
இருந்த நல் இமயத்து,
விலங்கல் போல்வன விறல் இரும் சினத்தன
வேழங்கள் துயர்கூர,
பிலம் கொள் வாள் எயிற்று அரி-அவை திரிதரு
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 2.

துடி கொள் நுண் இடைச் சுரி குழல் துளங்கு எயிற்று
இளங்கொடிதிறத்து, ஆயர்
இடி கொள் வெம் குரல் இன விடை அடர்த்தவன்
இருந்த நல் இமயத்து,
கடி கொள் வேங்கையின் நறு மலர் அமளியின்
மணி அறைமிசை வேழம்
பிடியினோடு வண்டு இசை சொல, துயில்கொளும்
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 3

மறம் கொள் ஆள்-அரி உரு என வெருவர,
ஒருவனது அகல் மார்வம்
திறந்து, வானவர் மணி முடி பணிதர
இருந்த நல் இமயத்துள்,
இறங்கி ஏனங்கள் வளை மருப்பு இடந்திடக்
கிடந்து அருகு எரி வீசும்
பிறங்கு மா மணி அருவியோடு இழிதரு
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 4

கரை செய் மாக் கடல் கிடந்தவன் கனை கழல்
அமரர்கள் தொழுது ஏத்த,
அரை செய் மேகலை அலர்மகள்-அவளொடும்
அமர்ந்த நல் இமயத்து,
வரைசெய் மாக் களிறு இள வெதிர் வளர் முளை
அளை மிகு தேன் தோய்த்துப்
பிரச வாரி தன் இளம் பிடிக்கு அருள்செயும்
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 5

பணங்கள் ஆயிரம் உடைய நல் அரவு-அணைப்
 பள்ளிகொள் பரமா! என்று
இணங்கி வானவர் மணி முடி பணிதர
 இருந்த நல் இமயத்து,
மணம் கொள் மாதவி நெடுங் கொடி விசும்பு உற
 நிமிர்ந்து அவை முகில் பற்றிப்
பிணங்கு பூம் பொழில் நுழைந்து வண்டு இசை சொலும்
 பிரிதி சென்று அடை, நெஞ்சே! 6

கார் கொள் வேங்கைகள் கன வரை தழுவிய
 கறி வளர் கொடி துன்னிப்
போர் கொள் வேங்கைகள் புன வரை தழுவிய
 பூம் பொழில் இமயத்துள்,
ஏர் கொள் பூஞ் சுனைத் தடம் படிந்து, இன மலர்
 எட்டும் இட்டு, இமையோர்கள்
பேர்கள் ஆயிரம் பரவி நின்று, அடிதொழும்
 பிரிதி சென்று அடை, நெஞ்சே! 7

இரவு கூர்ந்து, இருள் பெருகிய வரை முழை
 இரும் பசி-அது கூர,
அரவம் ஆவிக்கும் அகன்-பொழில் தழுவிய
 அருவரை இமயத்து,
பரமன், ஆதி, எம் பனி முகில் வண்ணன் என்று
 எண்ணி நின்று, இமையோர்கள்
பிரமனோடு சென்று, அடிதொழும் பெருந்தகைப்
 பிரிதி சென்று அடை, நெஞ்சே! 8

ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு
 உறு துயர் அடையாமல்,
ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை
 இருந்த நல் இமயத்து,
தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற
 தழல் புரை எழில் நோக்கி,
பேதை வண்டுகள் எரி என வெருவரு
 பிரிதி சென்று அடை, நெஞ்சே! 9

கரிய மா முகில் படலங்கள் கிடந்து அவை
முழங்கிட, களிறு என்று
பெரிய மாசுணம் வரை எனப் பெயர்தரு
பிரிதி எம் பெருமானை
வரி கொள் வண்டு அறை பைம் பொழில் மங்கையர்
கலியனது ஒலி மாலை
அரிய இன்-இசை பாடும் நல் அடியவர்க்கு
அரு வினை அடையாவே. 10

## 1, 3

### திருவதரி

பண் : பழந்தக்கராகம் தாளம் : ஏழொத்து

முற்ற மூத்து, கோல் துணையா,
முன்அடி நோக்கி வளைந்து,
இற்ற கால் போல், தள்ளி, மெள்ள
இருந்து அங்கு இளையாமுன்,
பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி
பெரு முலை ஊடு உயிரை
வற்ற வாங்கி உண்ட வாயான்
வதரி வணங்குதுமே. 1

முதுகு பற்றிக் கைத்தலத்தால்,
முன் ஒரு கோல் ஊன்றி,
விதிர் விதிர்த்து, கண் சுழன்று,
மேல் கிளைகொண்டு இருமி,
இது என் அப்பர் மூத்த ஆறு! என்று
இளையவர் ஏசாமுன்,
மது உண் வண்டு பண்கள் பாடும்
வதரி வணங்குதுமே. 2

உறிகள் போல் மெய்ந் நரம்பு எழுந்து,
ஊன் தளர்ந்து, உள்ளம் எள்கி,
நெறியை நோக்கிக் கண் சுழன்று,
நின்று நடுங்காமுன்,
அறிதி ஆகில், நெஞ்சம்! அன்பாய்
ஆயிரம் நாமம் சொலி,
வெறி கொள் வண்டு பண்கள் பாடும்
வதரி வணங்குதுமே. 3

பீளை சோரக் கண் இடுங்கி,
பித்து எழ மூத்து, இருமி,
தாள்கள் நோவத் தம்மில் முட்டி,
தள்ளி நடவாமுன்,
காளை ஆகி, கன்று மேய்த்து,
குன்று எடுத்து அன்று நின்றான்
வாளை பாயும் தண் தடம் சூழ்
வதரி வணங்குதுமே. 4

பண்டு காமர் ஆன ஆறும்,
பாவையர் வாய் அமுதம்
உண்ட ஆறும், வாழ்ந்த ஆறும்,
ஒக்க உரைத்து இருமி,
தண்டு காலா ஊன்றி ஊன்றி,
தள்ளி நடவாமுன்,
வண்டு பாடும் தண் துழாயான்
வதரி வணங்குதுமே. 5

எய்த்த சொல்லோடு ஈளை ஏங்கி,
இருமி, இளைத்து உடலம்,
பித்தர் போலச் சித்தம் வேறாய்ப்
பேசி அயராமுன்,
அத்தன், எந்தை, ஆதி மூர்த்தி,
ஆழ் கடலைக் கடைந்த
மைத்த சோதி எம்பெருமான்
வதரி வணங்குதுமே. 6

பப்ப அப்பர் மூத்த ஆறு
பாழ்ப்பது சீத் திரளை
ஒப்ப ஐக்கள் போத உந்த;
உன் தமர் காண்மின்! என்று
செப்பு நேர் மென் கொங்கை நல்லார்-
தாம் சிரியாத முன்னம்,
வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான்
வதரி வணங்குதுமே. 7

ஈசி போமின் ; ஈங்கு இரேல்மின் ;
இருமி இளைத்தீர் ; உள்ளம்
கூசி இட்டீர் என்று பேசும்
குவளை அம் கண்ணியர்பால்
நாசம் ஆன பாசம் விட்டு,
நல் நெறி நோக்கல் உறில்,
வாசம் மல்கு தண் துழாயான்
வதரி வணங்குதுமே. 8

புலன்கள் நைய மெய்யில் மூத்து,
போந்து இருந்து, உள்ளம் எள்கி,
கலங்க ஐக்கள் போத உந்தி,
கண்ட பிதற்றாமுன்,
அலங்கல் ஆய தண் துழாய்கொண்டு
ஆயிரம் நாமம் சொலி,
வலங்கொள் தொண்டர் பாடி ஆடும்
வதரி வணங்குதுமே. 9

வண்டு தண் தேன் உண்டு வாழும்
வதரி நெடு மாலைக்
கண்டல் வேலி மங்கை வேந்தன்
கலியன் ஒலி மாலை
கொண்டு தொண்டர் பாடி ஆடக்
கூடிடில், நீள் விசும்பில்
அண்டம் அல்லால், மற்று அவர்க்கு ஓர்
ஆட்சி அறியோமே. 10

## 1, 4

### திருவதரி ஆச்சிரமம்

பண் : தக்காகம் தாளம் : நடையொத்து

ஏனம் முன் ஆகி, இரு நிலம் இடந்து, அன்று,
இணை-அடி இமையவர் வணங்க,
தானவன் ஆகம் தரணியில் புரளத்
தடஞ் சிலை குனித்த என் தலைவன்—
தேன் அமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வ நல் நறு மலர் கொணர்ந்து,
வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 1

கானிடை உருவை, சுடு சரம் துரந்து,
கண்டு முன், கொடுந் தொழில் உரவோன்
ஊன் உடை அகலத்து அடு கணை குளிப்ப,
உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்—
தேன் உடைக் கமலத்து அயனொடு தேவர்
சென்று சென்று இறைஞ்சிட, பெருகு
வானிடை முது நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 2

இலங்கையும், கடலும், அடல் அரும் துப்பின்
இரு நிதிக்கு இறைவனும், அரக்கர்
குலங்களும் கெட, முன் கொடுந் தொழில் புரிந்த
கொற்றவன்—கொழுஞ் சுடர் சுழன்ற
விலங்கலில் உரிஞ்சி, மேல்நின்ற விசும்பில்
வெண் துகில் கொடி என விரிந்து,
வலம் தரு மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 3

துணிவு இனி உனக்குச் சொல்லுவன், மனமே!
தொழுது எழு: தொண்டர்கள்-தமக்குப்
பிணி ஒழித்து அமரர் பெரு விசும்பு அருளும்
பேர் அருளாளன், எம் பெருமான்—
அணி மலர்க் குழலார் அரம்பையர் துகிலும்
ஆரமும் வாரி வந்து, அணி நீர்
மணி கொழித்து, இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 4

பேய் இடைக்கு இருந்து, வந்த, மற்று அவள்-தன்
பெரு முலை சுவைத்திட, பெற்ற
தாய் இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று
தளர்ந்திட, வளர்ந்த என் தலைவன்—
சேய் முகட்டு உச்சி அண்டமும் சுமந்த
செம்பொன் செய் விலங்கலில் இலங்கு
வாய் முகட்டு இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 5

தேர் அணங்கு அல்குல் செழுங் கயல் கண்ணி-
திறத்து ஒரு மறத் தொழில் புரிந்து,
பார் அணங்கு இமில் ஏறு ஏழும் முன் அடர்த்த
பனி முகில் வண்ணன் எம் பெருமான்—
காரணம்-தன்னால் கடும் புனல் கயத்த
கரு வரை பிளவு எழக் குத்தி,
வாரணம் கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 6

வெம் திறல் களிறும், வேலைவாய் அமுதும்,
விண்ணொடு, விண்ணவர்க்கு அரசும்
இந்திரற்கு அருளி, எமக்கும் ஈந்தருளும்
எந்தை, எம் அடிகள், எம் பெருமான்—
அந்தரத்து அமரர் அடி-இணை வணங்க,
ஆயிரம் முகத்தினால் அருளி,
மந்தரத்து இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 7

மான் முனிந்து ஒரு கால் வரி சிலை வளைத்த
மன்னவன், பொன் நிறத்து உரவோன்
ஊன் முனிந்து, அவனது உடல் இரு பிளவா
உகிர் நுதி மடுத்து, அயன் அரனைத்
தான் முனிந்து இட்ட வெம் திறல் சாபம்
தவிர்த்தவன்—தவம்புரிந்து உயர்ந்த
மா முனி கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 8

கொண்டல், மாருதங்கள், குல வரை, தொகு நீர்க்
குரை கடல், உலகு உடன் அனைத்தும்
உண்ட மா வயிற்றோன், ஒண் சுடர் ஏய்ந்த
உம்பரும் ஊழியும் ஆனான்—
அண்டம் ஊடு அறுத்து, அன்று அந்தரத்து இழிந்து, அங்கு
அவனியாள் அலமரப் பெருகும்
மண்டு மா மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 9

வரும் திரை மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானை,
கருங் கடல் முந்நீர் வண்ணனை, எண்ணி,
கலியன் வாய் ஒலிசெய்த பனுவல்
வரம்செய்த ஐந்தும் ஐந்தும் வல்லார்கள்
வானவர் உலகு உடன் மருவி,
இருங் கடல் உலகம் ஆண்டு, வெண்குடைக் கீழ்
இமையவர் ஆகுவர், தாமே. 10

## 1, 5

### திருச்சாளக்கிராமம்

பண் : செந்திருதி தாளம் : ஏழொத்து

கலையும், கரியும், பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்,
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான், வென்றிச் செருக்களத்து ;
மலை கொண்டு அலை நீர் அணை கட்டி,
மதிள் நீர் இலங்கை வாள் அரக்கர்
தலைவன் தலை பத்து அறுத்து உகந்தான்
சாளக்கிராமம் அடை, நெஞ்சே ! 1

கடம் சூழ் கரியும், பரிமாவும்,
ஒலி மாத் தேரும், காலாளும்
உடன் சூழ்ந்து எழுந்த கடி இலங்கை
பொடியா வடி வாய்ச் சரம் துரந்தான்—
இடம் சூழ்ந்து எங்கும் இரு விசும்பில்
இமையோர் வணங்க, மணம் கமழும்
தடம் சூழ்ந்து எங்கும் அழகு ஆய
சாளக்கிராமம் அடை, நெஞ்சே ! 2

உலவு திரையும், குல வரையும்,
ஊழி முதலா எண் திக்கும்,
நிலவும், சுடரும், இருளும் ஆய்
நின்றான் ; வென்றி விறல் ஆழி
வலவன் ; வானோர்-தம் பெருமான் ;
மருவா அரக்கர்க்கு எஞ்ஞான்றும்
சலவன்—சலம் சூழ்ந்து அழகு ஆய
சாளக்கிராமம் அடை, நெஞ்சே ! 3

ஊரான்; குடந்தை உத்தமன்;
ஒரு கால், இரு கால் சிலை வளையத்
தோரா அரக்கர் தேர்-வெள்ளம்
செற்றான்; வற்றா வரு புனல் சூழ்
பேரான்; பேர் ஆயிரம் உடையான்;
பிறங்கு சிறை வண்டு அறைகின்ற
தாரான்—தாரா வயல் சூழ்ந்த
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 4

அடுத்து, ஆர்த்து எழுந்தாள் பில வாய் விட்டு
அலற, அவள் மூக்கு அயில் வாளால்
விடுத்தான்; விளங்கு சுடர் ஆழி
விண்ணோர் பெருமான்; நண்ணார்முன்
கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையைக்
கல் ஒன்று ஏந்தி, இன நிரைக்காத்
தடுத்தான்—தடம் சூழ்ந்து அழகு ஆய
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 5

தாய் ஆய் வந்த பேய் உயிரும்,
தயிரும், விழுதும், உடன் உண்ட
வாயான்; தூய வரி உருவின்
குறளாய்ச் சென்று, மாவலியை
ஏயான் இரப்ப, மூவடி மண்
இன்றே தா என்று, உலகு ஏழும்
தாயான்; காயா மலர் வண்ணன்—
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 6

ஏனோர் அஞ்ச வெம் சமத்துள்
அரி ஆய், பரிய இரணியனை
ஊன் ஆர் அகலம் பிளவு எடுத்த
ஒருவன்; தானே இரு சுடர் ஆய்,
வான் ஆய், தீ ஆய், மாருதம் ஆய்,
மலை ஆய், அலை நீர் உலகு அனைத்தும்
தான் ஆய், தானும் ஆனான்-தன்
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 7

வெந்தார் என்பும் சுடு நீறும்
 மெய்யில் பூசி, கையகத்து ஓர்
சந்து ஆர் தலைகொண்டு, உலகு ஏழும்
 திரியும் பெரியோன்-தான் சென்று, என்
எந்தாய்! சாபம் தீர் என்ன,
 இலங்கு அமுது நீர் திருமார்வில்
தந்தான்—சந்து ஆர் பொழில் சூழ்ந்த
 சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 8

தொண்டு ஆம் இனமும், இமையோரும்,
 துணை நூல் மார்வின் அந்தணரும்,
அண்டா! எமக்கே அருளாய் என்று,
 அணையும் கோயில், அருகு எல்லாம்
வண்டு ஆர் பொழிலின் பழனத்து
 வயலின் அயலே கயல் பாயத்
தண் தாமரைகள் முகம் அலர்த்தும்
 சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 9

தாரா ஆரும் வயல் சூழ்ந்த
 சாளக்கிராமத்து அடிகளை,
கார் ஆர் புறவின் மங்கை வேந்தன்,
 கலியன் ஒலிசெய் தமிழ்மாலை,
ஆர் ஆர் உலகத்து அறிவு உடையார்;
 அமரர் நல் நாட்டு அரசு ஆளப்
பேர் ஆயிரமும் ஓதுமின்கள் :
 அன்றி, இவையே பிதற்றுமினே. 10

## 1, 6

### நைமிசாரணியம்

பண் : தக்கராகம்  தாளம் : நடையொத்து

வாள் நிலா முறுவல், சிறு நுதல், பெருந் தோள்
 மாதரார் வன முலைப் பயனே
பேணினேன் ; அதனைப் பிழை எனக் கருதி,
 பேதையேன் பிறவி நோய் அறுப்பான்,
ஏண் இலேன் இருந்தேன் ; எண்ணினேன் ; எண்ணி,
 இளையவர் கலவியின் திறத்தை
நாணினேன் ; வந்து, உன் திருவடி அடைந்தேன்—
 நைமிசாரணியத்துள் எந்தாய்! 1

சிலம்பு அடி உருவின் கரு நெடுங் கண்ணார்-
திறத்தனாய், அறத்தையே மறந்து,
புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கி,
போக்கினேன் பொழுதினை வாளா ;
அலம் புரி தடக்கை ஆயனே! மாயா!
வானவர்க்கு அரசனே! வானோர்
நலம் புரிந்து இறைஞ்சும் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 2

சூதினைப் பெருக்கி, களவினைத் துணிந்து,
சுரி குழல் மடந்தையர்திறத்துக்
காதலே மிகுத்து, கண்டவா திரிந்த
தொண்டனேன் நமன்-தமர் செய்யும்
வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன் ; வேலை
வெண் திரை அலமரக் கடைந்த
நாதனே! வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 3

வம்பு உலாம் கூந்தல் மனைவியைத் துறந்து,
பிறர் பொருள், தாரம் என்று இவற்றை
நம்பினார் இறந்தால், நமன்-தமர் பற்றி,
எற்றி வைத்து, எரி எழுகின்ற
செம்பினால் இயன்ற பாவையை, பாவீ!
தழுவு என மொழிவதற்கு அஞ்சி,
நம்பனே! வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 4

இடும்பையால் அடர்ப்புண்டு, இடுமினோ துற்று என்று
இரந்தவர்க்கு இல்லையே என்று
நெடுஞ் சொலால் மறுத்த நீசனேன், அந்தோ!
நினைக்கிலேன் வினைப் பயன்-தன்னை ;
கடுஞ் சொலார், கடியார், காலனார் தமரால்
படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி,
நடுங்கி, நான் வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 5

கோடிய மனத்தால் சினத் தொழில் புரிந்து,
திரிந்து நாய் இனத்தொடும் திளைத்திட்டு,
ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன்,
உணர்விலேன் ஆதலால்; நமனர்
பாடியைப் பெரிதும் பரிசு அழித்திட்டேன்;
பரமனே! பாற்கடல் கிடந்தாய்!
நாடி நான் வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 6

நெஞ்சினல் நினைந்தும், வாயினல் மொழிந்தும்,
நீதி அல்லாதன செய்தும்,
துஞ்சினர் செல்லும் தொல் நெறி கேட்டே
துளங்கினேன்; விளங்கனி முனிந்தாய்!
வஞ்சனேன், அடியேன் நெஞ்சினில் பிரியா
வானவா! தானவர்க்கு என்றும்
நஞ்சனே! வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 7

ஏவினர், கலியார் நலிக என்று என்மேல்—
எங்ஙனே வாழும் ஆறு?—ஐவர்;
கோவினர் செய்யும் கொடுமையை மடித்தேன்,
குறுங்குடி நெடுங் கடல் வண்ணா!
பாவின் ஆர் இன் சொல் பல் மலர் கொண்டு, உன்
பாதமே பரவி, நான் பணிந்து, என்
நாவினல், வந்து, உன் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 8

ஊன் இடைச் சுவர் வைத்து, என்பு தூண் நாட்டி,
உரோமம் வேய்ந்து, ஒன்பது வாசல்-
தான் உடைக் குரம்பை பிரியும்போது, உன்-தன்
சரணமே சரணம் என்று இருந்தேன்;
தேன் உடைக் கமலத் திருவினுக்கு அரசே!
திரை கொள் மா நெடுங் கடல் கிடந்தாய்!
நான் உடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்—
நைமிசாரணியத்துள் எந்தாய்! 9

ஏதம் வந்து அணுகாவண்ணம் நாம் எண்ணி,
    எழுமினோ தொழுதும் என்று இமையோர்-
நாதன் வந்து இறைஞ்சும் நைமிசாரணியத்து
    எந்தையைச் சிந்தையுள் வைத்து,
காதலே மிகுத்த கலியன் வாய் ஒலிசெய்
    மாலை-தான் கற்று வல்லார்கள்
ஓத நீர் வையம் ஆண்டு, வெண் குடைக் கீழ்,
    உம்பரும் ஆகுவர், தாமே. 10

## 1, 7

### சிங்கவேழ் குன்றம்

பண் : நைவளம்    தாளம் : ஏழொத்து

அம் கண் ஞாலம் அஞ்ச, அங்கு, ஓர் ஆள் அரி ஆய், அவுணன்
பொங்க, ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்—
பைங் கண் ஆனைக் கொம்பு கொண்டு, பத்திமையால் அடிக்கீழ்
செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேழ்குன்றமே. 1

அலைத்த பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரி ஆய், அவுணன்,
கொலைக் கையாளன், நெஞ்சு இடந்த கூர் உகிராளன் இடம்—
மலைத்த செல் சாத்து எறிந்த பூசல் வன் துடி வாய் கடுப்ப,
சிலைக் கை வேடர் தெழிப்பு அறாத சிங்கவேழ்குன்றமே. 2

ஏய்ந்த பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரி ஆய், அவுணன்
வாய்ந்த ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்—
ஓய்ந்த மாவும், உடைந்த குன்றும், அன்றியும், நின்று அழலால்
தேய்ந்த வேயும் அல்லது, இல்லாச் சிங்கவேழ்குன்றமே. 3

எவ்வம் வெவ் வேல் பொன்பெயரோன் ஏதலன் இன் உயிரை
வவ்வி, ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்—
கவ்வும் நாயும், கழுகும், உச்சிப்போதொடு கால் சுழன்று,
தெய்வம் அல்லால், செல்ல ஒண்ணாச் சிங்கவேழ்குன்றமே. 4

மென்ற பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரி ஆய், அவுணன்
பொன்ற ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்—
நின்ற செந்தீ மொண்டு, சூறை, நீள் விசும்பூடு இரிய,
சென்று காண்டற்கு-அரிய கோயில் சிங்கவேழ்குன்றமே. 5

எரிந்த பைங் கண் இலங்கு பேழ் வாய் எயிற்றொடு, இது எவ் உரு என்று,
இரிந்து, வானோர் கலங்கி ஓட, இருந்த அம்மானது இடம்—
நெரிந்த வேயின் முழையுள் நின்று, நீள் நெறிவாய், உழுவை
திரிந்த ஆனைச் சுவடு பார்க்கும் சிங்கவேழ்குன்றமே. 6

முனைத்த சீற்றம் விண் சுடப் போய், மூவுலகும் பிறவும்
அனைத்தும் அஞ்ச, ஆள் அரி ஆய் இருந்த அம்மானது இடம்—
கனைத்த தீயும் கல்லும், அல்லா வில் உடை வேடரும் ஆய்,
தினைத்தனையும் செல்ல ஒண்ணாச் சிங்கவேழ்குன்றமே. 7

நாத் தழும்ப நான்முகனும் ஈசனும் ஆய் முறையால்
ஏத்த, அங்கு ஓர் ஆள் அரி ஆய் இருந்த அம்மானது இடம்—
காய்த்த வாகை நெற்று ஒலிப்ப, கல் அதர் வேய்ங்கழை போய்த்
தேய்த்த தீயால் விண் சிவக்கும் சிங்கவேழ்குன்றமே. 8

நல்லை, நெஞ்சே! நாம் தொழுதும் : நம்முடை நம் பெருமான்,
அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரந் தோளன், இடம்—
நெல்லி மல்கி, கல் உடைப்ப, புல் இலை ஆர்த்து, அதர்வாய்
சில்லி சில் என்று ஒல் அறாத சிங்கவேழ்குன்றமே. 9

செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேழ்குன்று உடைய
எங்கள் ஈசன் எம் பிரானை இருந் தமிழ் நூல்-புலவன்,
மங்கை ஆளன் மன்னு தொல் சீர் வண்டு அறை தார்க் கலியன்,
செங்கையாளன் செஞ்சொல் மாலை வல்லவர் தீது இலரே. 10

## 1, 8

### திருவேங்கடம் : 1

பண் : சீகாமரம் தாளம் : இடையொத்து

கொங்கு அலர்ந்த மலர்க் குருந்தம்
ஒசித்த கோவலன், எம் பிரான்,
சங்கு தங்கு தடங் கடல் துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்,
பொங்கு புள்ளினை வாய் பிளந்த
புராணர்-தம் இடம்—பொங்கு நீர்
செங் கயல் திளைக்கும் சுனைத் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 1

பள்ளி ஆவது பாற்கடல், அரங்-
கம் ; இரங்க வன் பேய் முலை
பிள்ளையாய் உயிர் உண்ட எந்தை
பிரான்-அவன் பெருகும் இடம்—
வெள்ளியான், கரியான், மணி நிற
வண்ணன் என்று எண்ணி, நாள்தொறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 2

நின்ற மா மருது இற்று வீழ
நடந்த நின்மலன், நேமியான்,
என்றும் வானவர் கைதொழும் இணைத்
தாமரை அடி எம் பிரான்,
கன்றி மாரி பொழிந்திட, கடிது
ஆ-நிரைக்கு இடர் நீக்குவான்,
சென்று குன்றம் எடுத்தவன் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 3

பார்த்தற்கு ஆய், அன்று, பாரதம் கைசெய்-
திட்டு வென்ற பரஞ்சுடர்,
கோத்து அங்கு ஆயர்-தம் பாடியில் குரவை
பிணைந்த எம் கோவலன்,
ஏத்துவார்-தம் மனத்து உள்ளான், இட-
வெந்தை மேவிய எம் பிரான்,
தீர்த்த நீர்த் தடம் சோலை சூழ் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 4

வண் கையான், அவுணர்க்கு நாயகன்
வேள்வியில் சென்று, மாணியாய்,
மண் கையால் இரந்தான், மராமரம்
ஏழும் எய்த வலத்தினன்,
எண் கையான், இமயத்து உள்ளான், இருஞ்-
சோலை மேவிய எம் பிரான்,
திண் கை மா துயர் தீர்த்தவன் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 5

என் திசைகளும் ஏழ் உலகமும்
வாங்கி, பொன் வயிற்றில் பெய்து,
பண்டு ஓர் ஆல்இலைப் பள்ளி கொண்டவன்,
பால் மதிக்கு இடர் தீர்த்தவன்,
ஒண் திறல் அவுணன் உரத்து உகிர்
வைத்தவன், ஒள் எயிற்றெடு
திண் திறல் அரியாயவன் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 6

பாரும், நீர், எரி, காற்றினேடு
ஆகாசமும், இவை ஆயினன்,
பேரும் ஆயிரம் பேச நின்ற
பிறப்பிலி பெருகும் இடம்—
காரும் வார் பனி நீள் விசும்பிடைச்
சோரும் மா முகில் தோய்தர,
சேரும் வார் பொழில் சூழ் எழில் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 7

அம்பரம், அனல், கால், நிலம், சலம்
ஆகி நின்ற அமரர்-கோன்,
வம்பு உலாம் மலர்மேல் மலி மட
மங்கை-தன் கொழுநன்-அவன்,
கொம்பின் அன்ன இடை மடக் குற
மாதர் நீள் இதணம்தொறும்
செம் புனம்-அவை காவல் கொள் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 8

பேசும் இன் திருநாமம் எட்டு எழுத்தும்
சொலி நின்று, பின்னரும்
பேசுவார்-தமை உய்ய வாங்கி,
பிறப்பு அறுக்கும் பிரான் இடம்—
வாச மா மலர் நாறு வார் பொழில்
சூழ் தரும், உலகுக்கு எலாம்
தேசமாய்த் திகழும் மலைத் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 9

செங் கயல் திளைக்கும் சுனைத் திரு-
வேங்கடத்து உறை செல்வனை
மங்கையர் தலைவன், கலிகன்றி,
வண் தமிழ்ச் செஞ்சொல் மாலைகள்
சங்கை இன்றித் தரித்து உரைக்கவல்-
லார்கள் தஞ்சமதாகவே
வங்க மா கடல் வையம் காவலர்
ஆகி, வான்-உலகு ஆள்வரே. 10

## 1, 9

### திருவேங்கடம் : 2

தாயே தந்தை என்றும், தாரமே, கிளை, மக்கள் என்றும்,
நோயே பட்டொழிந்தேன்; நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால்—
வேய் ஏய் பூம் பொழில் சூழ் விரை ஆர் திருவேங்கடவா!—
நாயேன் வந்து அடைந்தேன் ; நல்கி, ஆள் என்னைக் கொண்டருளே.

மான் ஏய் கண் மடவார் மயக்கில் பட்டு, மா நிலத்து
நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்—
தேன் ஏய் பூம் பொழில் சூழ் திருவேங்கட மா மலை என்
ஆனாய்!—வந்து அடைந்தேன் : அடியேனை ஆட் கொண்டருளே. 2

கொன்றேன் பல் உயிரை, குறிக்கோள் ஒன்று இலாமையினால் ;
என்றேனும் இரந்தார்க்கு இனிது ஆக உரைத்து அறியேன்—
குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மா மலை வேங்கடவா!—
அன்றே வந்து அடைந்தேன் : அடியேனை ஆட் கொண்டருளே. 3

குலம்-தான் எத்தனையும் பிறந்தே இறந்து, எய்த்தொழிந்தேன் ;
நலம்-தான் ஒன்றும் இலேன்; நல்லது ஓர் அறம் செய்தும் இலேன்—
நிலம் தோய் நீள் முகில் சேர் நெறி ஆர் திருவேங்கடவா!—
அலந்தேன் வந்து அடைந்தேன் : அடியேனை ஆட் கொண்டருளே. 4

எப் பாவம் பலவும் இவையே செய்து, இளைத்தொழிந்தேன் ;
துப்பா! நின் அடியே தொடர்ந்து ஏத்தவும் கிற்கின்றிலேன்—
செப்பு ஆர் திண் வரை சூழ் திருவேங்கட மா மலை என்
அப்பா!—வந்து அடைந்தேன் : அடியேனை ஆட் கொண்டருளே. 5

மண் ஆய், நீர், எரி, கால், மஞ்சு உலாவும் ஆகாசமும் ஆம்,
புண் ஆர் ஆக்கை-தன்னுள் புலம்பித் தளர்ந்து,எய்த்தொழிந்தேன்—
விண் ஆர் நீள் சிகர விரை ஆர் திருவேங்கடவா!—
அண்ணா! வந்து அடைந்தேன் : அடியேனை ஆட்கொண்டருளே. 6

தெரியேன் பாலகனாய், பல தீமைகள் செய்துமிட்டேன் ;
பெரியேன் ஆயினபின், பிறர்க்கே உழைத்து ஏழை ஆனேன்—
கரி சேர் பூம் பொழில் சூழ் கன மா மலை வேங்கடவா!—
அரியே! வந்து அடைந்தேன் : அடியேனை ஆட்கொண்டருளே. 7

நோற்றேன் பல் பிறவி ; நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால்,
ஏற்றேன் ; இப் பிறப்பே இடர் உற்றனன்—எம் பெருமான்!
கோல் தேன் பாய்ந்து ஒழுகும் குளிர் சோலை சூழ் வேங்கடவா!—
ஆற்றேன், வந்து அடைந்தேன் : அடியேனை ஆட்கொண்டருளே. 8

பற்றேல் ஒன்றும் இலேன் ; பாவமே செய்து, பாவி ஆனேன் ;
மற்றேல் ஒன்று அறியேன்—மாயனே! எங்கள் மாதவனே!
கல் தேன் பாய்ந்து ஒழுகும் கமலச் சுனை வேங்கடவா!—
அற்றேன், வந்து அடைந்தேன் : அடியேனை ஆட்கொண்டருளே. 9

கண் ஆய், ஏழ் உலகுக்கு உயிர் ஆய எம் கார் வண்ணனை,
விண்ணோர்-தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை,
திண் ஆர் மாடங்கள் சூழ் திரு மங்கையர்-கோன், கலியன்,
பண் ஆர் பாடல் பத்தும் பயில்வார்க்கு இல்லை, பாவங்களே. 10

## 1, 10

### திருவேங்கடம் : 3

பண் : மேகராகக் குறிஞ்சி தாளம் : ஏழொத்து

கண் ஆர் கடல் சூழ் இலங்கைக்கு இறைவன்-தன்
திண் ஆகம் பிளக்கச் சரம் செல உய்த்தாய்!
விண்ணோர் தொழும் வேங்கட மா மலை மேய
அண்ணா! அடியேன் இடரைக் களையாயே. 1

இலங்கைப் பதிக்கு, அன்று, இறை ஆய அரக்கர்
குலம் கெட்டு அவர் மாள, கொடிப் புள் திரித்தாய்!
விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய
அலங்கல் துளப முடியாய்! அருளாயே. 2

நீர் ஆர் கடலும் நிலனும் முழுது உண்டு,
ஏர் ஆலம் இளந் தளிர்மேல் துயில் எந்தாய்!
சீர் ஆர் திருவேங்கட மா மலை மேய
ஆரா அமுதே! அடியேற்கு அருளாயே. 3

உண்டாய்—உறிமேல் நறு நெய் அமுது ஆக;
கொண்டாய்—குறள் ஆய், நிலம் ஈர் அடியாலே;
விண் தோய் சிகரத் திருவேங்கடம் மேய
அண்டா! அடியேனுக்கு அருள்புரியாயே. 4

தூண் ஆய் அதனூடு அரியாய், வந்து தோன்றி,
பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்!
சேண் ஆர் திருவேங்கட மா மலை மேய
கோள் நாகணையாய்! குறிக்கொள் எனை நீயே. 5

மன்னா இம் மனிசப் பிறவியை நீக்கி,
தன் ஆக்கி, தன் இன் அருள் செய்யும் தலைவன்
மின் ஆர் முகில் சேர் திருவேங்கடம் மேய
என் ஆனை, என் அப்பன் என் நெஞ்சில் உளானே. 6

மான் ஏய் மட நோக்கிதிறத்து எதிர் வந்த
ஆன் ஏழ் விடை செற்ற அணி வரைத் தோளா!
தேனே!திருவேங்கட மா மலை மேய
கோனே! என் மனம் குடிகொண்டு, இருந்தாயே. 7

சேயன், அணியன், என சிந்தையுள் நின்ற
மாயன், மணி வாள், ஒளி வெண் தரளங்கள்
வேய் விண்டு உதிர் வேங்கட மா மலை மேய
ஆயன் அடி அல்லது, மற்று அறியேனே. 8

வந்தாய்; என் மனம் புகுந்தாய்; மன்னி நின்றாய்—
நந்தாத கொழுஞ் சுடரே! எங்கள் நம்பீ!
சிந்தாமணியே! திருவேங்கடம் மேய
எந்தாய்!—இனி யான் உனை என்றும் விடேனே. 9

வில்லார் மலி வேங்கட மா மலை மேய
மல் ஆர் திரள் தோள் மணி வண்ணன் அம்மானைக்
கல் ஆர் திரள் தோள் கலியன் சொன்ன மாலை
வல்லார்-அவர் வானவர் ஆகுவர், தாமே. 10

## 2, 1

### திருவேங்கடம் : 4

பண் : சீகாமரம் தாளம் : ஏழொத்து

வானவர்-தங்கள் சிந்தை போல, என்
நெஞ்சமே! இனிது உவந்து, மா தவ
மானவர்-தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை,
கானவர் இடு கார் அகில்-புகை
ஓங்கு வேங்கடம் மேவி, மாண் குறள்
ஆன அந்தணற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1

உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன்
உகந்தவர்-தம்மை மண்மிசைப்
பிறவியே கெடுப்பான், அது கண்டு, என் நெஞ்சம் என்பாய்!
குறவர் மாதர்களோடு வண்டு
குறிஞ்சி மருள் இசை பாடும் வேங்கடத்து
அறவன் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 2

இண்டை ஆயின கொண்டு தொண்டர்கள்
ஏத்துவார் உறவோடும் வானிடைக்
கொண்டு போய் இடவும், அது கண்டு, என் நெஞ்சம் என்பாய்!
வண்டு வாழ் வட வேங்கட மலை
கோயில் கொண்டு, அதனோடும் மீமிசை-
அண்டம் ஆண்டு இருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே.

பாவியாது செய்தாய், என் நெஞ்சமே!
பண்டு தொண்டு செய்தாரை மண்மிசை
மேவி ஆட்கொண்டு போய், விசும்பு ஏற வைக்கும் எந்தை,
கோவி நாயகன், கொண்டல் உந்து உயர்
வேங்கட மலை ஆண்டு, வானவர்
ஆவியாய் இருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 4

பொங்கு போதியும் பிண்டியும் உடைப்
புத்தர் நோன்பியர் பள்ளியுள் உறை
தங்கள் தேவரும் தாங்களுமே ஆக, என் நெஞ்சம் என்பாய்!
எங்கும் வானவர் தானவர் நிறைந்து
ஏத்தும் வேங்கடம் மேவி நின்று, அருள்
அம் கண் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 5

துவரி ஆடையர் மட்டையர் சமண்
தொண்டர்கள் மண்டி உண்டு, பின்னரும்
தமரும் தாங்களுமே தடிக்க, என் நெஞ்சம் என்பாய் !
கவரி மாக் கணம் சேரும் வேங்கடம்
கோயில் கொண்ட கண் ஆர் விசும்பிடை
அமர நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 6

தருக்கினல் சமண் செய்து, சோறு தண்
தயிரினல் திரளை மிடற்றிடை
நெருக்குவார் அலக்கண்-அது கண்டு, என் நெஞ்சம் என்பாய் !
மருள்கள் வண்டுகள் பாடும் வேங்கடம்
கோயில் கொண்டு, அதனேடும் வானிடை
அருக்கன் மேவிநிற்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 7

சேயன், அணியன், சிறியன், பெரியன்
என்பதும் சிலர் பேசக் கேட்டிருந்-
தே, என் நெஞ்சம் என்பாய் ! எனக்கு ஒன்று சொல்லாதே,
வேய்கள் நின்று வெண் முத்தமே சொரி
வேங்கட மலை கோயில் மேவிய
ஆயர் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 8

கூடி ஆடி உரைத்ததே உரைத்
தாய், என் நெஞ்சம் என்பாய் ! துணிந்து கேள் ;
பாடி ஆடிப் பலரும் பணிந்து எத்திக் காண்கிலார் ;
ஆடு தாமரையோனும் ஈசனும்
அமரர்-கோனும் நின்று எத்தும் வேங்கடத்து
ஆடு கூத்தனுக்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 9

மின்னு மா முகில் மேவு தண் திரு-
வேங்கட மலை கோயில் மேவிய
அன்னம் ஆய் நிகழ்ந்த அமரர் பெருமானைக்
கன்னி மா மதிள் மங்கையர் கலி-
கன்றி இன் தமிழால் உரைத்த இம்
மன்னு பாடல் வல்லார்க்கு இடம் ஆகும், வான் உலகே. 10

## 2, 2

### திரு எவ்வுளூர்

பண் : பழந்தக்கராகம் தாளம் : ஏழொத்து

காசை ஆடை மூடி ஓடிக் காதல் செய் தானவன் ஊர்
நாசம் ஆக நம்ப வல்ல நம்பி நம் பெருமான்,
வேயின் அன்ன தோள் மடவார், வெண்ணெய் உண்டான் இவன் என்று,
ஏச நின்ற எம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 1

தையலாள்மேல் காதல் செய்த தானவன் வாள் அரக்கன்
பொய் இலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்றும், அன்று
செய்த வெம் போர்-தன்னில், அங்கு ஓர் செஞ்சரத்தால் உருள
எய்த எந்தை, எம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 2

முன், ஓர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து, அரக்கன்
மன் ஊர்-தன்னை வாளியினால் மாள முனிந்து, அவனே
பின், ஓர் தூது ஆதி-மன்னர்க்கு ஆகி, பெருநிலத்தார்
இன்னார் தூதன் என நின்றான்—எவ்வுள் கிடந்தானே. 3

பந்து அணைந்த மெல் விரலாள் பாவை-தன் காரணத்தால்,
வெந் திறல் ஏறு ஏழும் வென்ற வேந்தன், விரி புகழ் சேர்
நந்தன் மைந்தன் ஆக ஆகும் நம்பி நம் பெருமான்,
எந்தை தந்தை தம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 4

பாலன் ஆகி ஞாலம் ஏழும் உண்டு, பண்டு ஆல்இலைமேல்
சால நாளும் பள்ளி கொள்ளும் தாமரைக் கண்ணன், எண்ணில்,
நீலம் ஆர் வண்டு உண்டு வாழும் நெய்தல் அம் தண் கழனி
ஏலம் நாறும் பைம் புறவின்—எவ்வுள் கிடந்தானே. 5

சோத்தம், நம்பி! என்று தொண்டர் மிண்டித் தொடர்ந்து அழைக்கும்
ஆத்தன் நம்பி, செங்கண் நம்பி ஆகிலும், தேவர்க்கு எல்லாம்
மூத்த நம்பி, முக்கண் நம்பி என்று முனிவர் தொழுது
ஏத்தும் நம்பி, எம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 6

திங்கள், அப்பு, வான், எரி, கால் ஆகி, திசைமுகனார்
தங்கள் அப்பன், சாமி அப்பன், பாகத்து இருந்த வண்டு உண்
தொங்கல் அப்பு நீள் முடியான் சூழ் கழல் சூடநின்ற
எங்கள் அப்பன், எம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 7

முனிவன், மூர்த்தி மூவர் ஆகி, வேதம் விரித்து உரைத்த
புனிதன், பூவை வண்ணன், அண்ணல், புண்ணியன், விண்ணவர்-கோன்,
தனியன், சேயன், தான் ஒருவன் ஆகிலும், தன் அடியார்க்கு
இனியன், எந்தை, எம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 8

பந்து இருக்கும் மெல் விரலாள், பாவை, பனி மலராள்,
வந்து இருக்கும் மார்வன், நீல மேனி மணி வண்ணன்,
அந்தரத்தில் வாழும் வானோர்-நாயகன் ஆய் அமைந்த
இந்திரற்கும் தம் பெருமான்—எவ்வுள் கிடந்தானே. 9

இண்டை கொண்டு தொண்டர் ஏத்த எவ்வுள் கிடந்தானை
வண்டு பாடும் பைம் புறவின் மங்கையர்-கோன் கலியன்
கொண்ட சீரால் தண் தமிழ் செய் மாலை ஈர் ஐந்தும் வல்லார்
அண்டம் ஆள்வது ஆணை; அன்றேல், ஆள்வர்—அமர் உலகே. 10

## 2, 3

### திருவல்லிக்கேணி

பண் : புறநீர்மை தாளம் : ஒன்பதொத்து

வில் பெரு விழவும், கஞ்சனும், மல்லும்,
வேழமும், பாகனும் வீழச்
செற்றவன்-தன்னை, புரம் எரி செய்த
சிவன் உறு துயர் களை தேவை,
பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
பார்த்தன்-தன் தேர்முன் நின்றானை,
சிற்றவை பணியால் முடி துறந்தானை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1

வேதத்தை, வேதத்தின் சுவைப் பயனை,
விழுமிய முனிவரர் விழுங்கும்
கோது இல் இன் கனியை, நந்தனர் களிற்றை,
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை, அமுதை, என்னை ஆள் உடை
அப்பனை—ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாட மா மயிலைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 2

வஞ்சனை செய்யத் தாய் உரு ஆகி
வந்த பேய் அலறி மண் சேர,
நஞ்சு அமர் முலையூடு உயிர் செக உண்ட
நாதனை, தானவர் கூற்றை,
விஞ்சை வானவர், சாரணர், சித்தர்,
வியந்துதி செய்ய, பெண் உரு ஆகி,
அம் சுவை அமுதம் அன்று அளித்தானை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 3

இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த
எழில் விழவில் பழ நடைசெய்
மந்திர விதியில் பூசனை பெறாது,
மழை பொழிந்திட, தளர்ந்து, ஆயர்
எந்தம்மோடு இன ஆ-நிரை தளராமல்,
எம் பெருமான் அருள் என்ன,
அந்தம் இல் வரையால் மழை தடுத்தானை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 4

இன் துணைப் பதுமத்து அலர்மகள்-தனக்கும்
இன்பன், நல் புவி-தனக்கு இறைவன்,
தன் துணை ஆயர் பாவை நப்பின்னை-
தனக்கு இறை, மற்றையோர்க்கு எல்லாம்
வன் துணை, பஞ்ச பாண்டவர்க்கு ஆகி,
வாய் உரை தூது சென்று இயங்கும்
என் துணை, எந்தை தந்தை தம்மானை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 5

அந்தகன் சிறுவன் அரசர்-தம் அரசற்கு
இளையவன் அணி இழையைச் சென்று,
எந்தமக்கு உரிமை செய் என, தரியாது,
எம் பெருமான்! அருள் என்ன,
சந்தம் அல் குழலாள் அலக்கண் நூற்றுவர்-தம்
பெண்டிரும் எய்தி, நூல் இழப்ப,
இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 6

பரதனும், தம்பி சத்துருக்கனனும்,
இலக்குமனோடு மைதிலியும்
இரவும் நன் பகலும் துதி செய்ய நின்ற
இராவணாந்தகனை, எம்மானை—
குரவமே கமழும் குளிர் பொழிலூடு
குயிலொடு மயில்கள் நின்று ஆல,
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 7

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்
வாயில் ஓர் ஆயிரம் நாமம்
ஒள்ளிய ஆகிப் போத, ஆங்கு, அதனுக்கு
ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி,
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைப்ப,
பிறை எயிற்று அனல் விழிப் பேழ் வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை—
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 8

மீன் அமர் பொய்கை நாள்மலர் கொய்வான்
வேட்கையினோடு சென்று இழிந்த
கான் அமர் வேழம் கைஎடுத்து அலற,
கரா அதன் காலினைக் கதுவ,
ஆனையின் துயரம் தீரப் புள் ஊர்ந்து,
சென்று நின்று ஆழிதொட்டானை—
தேன் அமர் சோலை மாட மா மயிலைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 9

மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும்
மாட மாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர்-கோன் செய்த நல் மயிலைத்
திருவல்லிக்கேணி நின்றானை,
கன்னி நல் மாட மங்கையர் தலைவன்
காமரு சீர்க் கலிகன்றி
சொன்ன சொல்-மாலை பத்து உடன் வல்லார்
சுகம் இனிது ஆள்வர் வான்-உலகே. 10

## 2, 4

### திருநீர்மலை

பண் : நட்டபாடை   தாளம் : மிடர்தொத்து

அன்று ஆயர் குலக் கொடியோடு அணி மா
  மலர் மங்கையொடு அன்பு அளவி, அவுணர்க்கு
என்றானும் இரக்கம் இலாதவனுக்கு
  உறையும் இடம் ஆவது—இரும் பொழில் சூழ்
நன்று ஆய புனல் நறையூர், திருவாலி,
  குடந்தை, தடம் திகழ் கோவல்நகர் ;
நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தாற்கு
  இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 1

காண்டாவனம் என்பது ஓர் காடு அமரர்க்கு
  அரையன்னது, கண்டு அவன் நிற்க, முனே
மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும் ;
  அது அன்றியும், முன் உலகம் பொறை தீர்த்து
ஆண்டான், அவுணன்-அவன் மார்வு-அகலம்
  உகிரால் வகிர் ஆக முனிந்து, அரியாய்
நீண்டான், குறள் ஆகி நிமிர்ந்தவனுக்கு
  இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 2

அலம், மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து,
  அடல் ஆழியினால் அணி ஆர் உருவில்,
புலம் மன்னும் வடம் புனை கொங்கையினாள்
  பொறை தீர, முன் ஆள் அடு வாள் அமரில்
பல மன்னர் பட, சுடர் ஆழியினைப்
  பகலோன் மறையப் பணிகொண்டு, அணி சேர்
நில மன்னனும் ஆய், உலகு ஆண்டவனுக்கு
  இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 3

தாங்காதது ஓர் ஆள் அரி ஆய், அவுணன்-
  தனை வீட முனிந்து, அவனால் அமரும்
பூங் கோதையர் பொங்கு எரி மூழ்க விளைத்து,
  அது அன்றியும், வென்றி கொள் வாள் அமரில்
பாங்கு ஆக முன் ஐவரொடு அன்பு அளவி,
  பதிற்றைந்து இரட்டிப் படை வேந்தர் பட,
நீங்காச் செருவில் நிறை காத்தவனுக்கு
  இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 4

மாலும் கடல் ஆர, மலைக் குவடு இட்டு,
அணை கட்டி, வரம்பு உருவ, மதி சேர்
கோல மதிள் ஆய இலங்கை கெட,
படை தொட்டு, ஒருகால், அமரில் அதிர,
காலம் இது என்று அயன் வாளியினால்
கதிர் நீள் முடி பத்தும் அறுத்து அமரும்
நீல முகில் வண்ணன் எமக்கு இறைவற்கு
இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 5

பார் ஆர் உலகும், பனி மால் வரையும்,
கடலும், சுடரும் இவை உண்டும், எனக்கு
ஆராது என நின்றவன் ; எம் பெருமான்,
அலை நீர் உலகுக்கு அரசு ஆகிய அப்
பேரானை முனிந்த முனிக்கு அரையன்,
பிறர் இல்லை நுனக்கு எனும் எல்லையினான்,
நீர் ஆர் பெயரான், நெடுமால்-அவனுக்கு
இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 6

புகர் ஆர் உரு ஆகி முனிந்தவனைப்
புகழ் வீட முனிந்து, உயிர் உண்டு, அசுரன்
நகர் ஆயின பாழ் பட, நாமம் எறிந்து,
அது அன்றியும், வென்றி கொள் வாள் அவுணன்,
பகராதவன் ஆயிரம் நாமம், அடிப்
பணியாதவனை, பணியால், அமரில்
நிகர் ஆயவன் நெஞ்சு இடந்தான்-அவனுக்கு
இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 7

பிச்சச் சிறு பீலி பிடித்து, உலகில்
பிணம் தின் மடவார்-அவர் போல், அங்ஙனே
அச்சம் இலர் நாண் இலர் ஆதன்மையால்,
அவர் செய்கை வெறுத்து, அணி மா மலர் தூய்,
நச்சி, நமனர் அடையாமை நமக்கு
அருள்செய் என உள் குழைந்து, ஆர்வமொடு
நிச்சம் நினைவார்க்கு அருள்செய்யும்-அவற்கு
இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 8

பேசும் அளவு அன்று இது, வம்மின், நமர்!
பிறர் கேட்பதன் முன் ; பணிவார் வினைகள்
நாசம் அது செய்திடும் ; ஆதன்மையால்,
அதுவே நமது உய்விடம் : நாள்மலர்மேல்
வாசம் அணி வண்டு அறை பைம் புறவின்—
மனம் ஐந்தொடு நைந்து உழல்வார் மதி இல்
நீசர்-அவர் சென்று அடையாதவனுக்கு
இடம் மா மலை ஆவது—நீர்மலையே. 9

நெடுமால்-அவன் மேவிய நீர்மலைமேல்
நிலவும் புகழ் மங்கையர்-கோன், அமரில்
கட மா களி யானை வல்லான், கலியன்
ஒலி செய் தமிழ் மாலை வல்லார்க்கு உடனே
விடும் மால் வினை ; வேண்டிடில், மேல் உலகும்
எளிது ஆயிடும் ; அன்றி, இலங்கு ஒலி சேர்
கொடு மா கடல் வையகம் ஆண்டு, மதிக்
குடை மன்னவர் ஆய், அடி கூடுவரே. 10

## 2, 5

### திருக்கடல்மல்லை : 1

பண் : சீகாமரம் தாளம் : நடையொத்து

பார்-ஆயது உண்டு உமிழ்ந்த பவளத் தூணை ;
படு கடலில் அமுதத்தை ; பரி வாய் கீண்ட
சீரானை ; எம்மானை ; தொண்டர்-தங்கள்
சிந்தையுள்ளே முளைத்து எழுந்த தீம் கரும்பினை ;
போர் ஆனைக் கொம்பு ஒசித்த போர் ஏற்றினை ;
புணர் மருதம் இற நடந்த பொன் குன்றினை ;
கார் ஆனை இடர் கடிந்த கற்பகத்தைக்
கண்டது நான்—கடல்மல்லைத் தலசயனத்தே. 1

பூண்டு அவத்தம், பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டு,
பொய்ந் நூலை மெய்ந் நூல் என்று என்றும் ஓதி,
மாண்டு அவத்தம் போகாதே வம்மின் : எந்தை ;
என் வணங்கப்படுவானை ; கணங்கள் ஏத்தும்
நீண்ட வத்தை ; கரு முகிலை ; எம்மான்-தன்னை ;
நின்றவூர் நித்திலத்தை ; தொத்து ஆர் சோலைக்
காண்டவத்தைக் கனல் எரிவாய்ப் பெய்வித்தானைக்
கண்டது நான்—கடல்மல்லைத் தலசயனத்தே. 2

உடம்பு உருவில் மூன்று ஒன்றாய், மூர்த்தி வேறு ஆய்,
உலகு உய்ய நின்றானை; அன்று, பேய்ச்சி
விடம் பருகு வித்தகனை; கன்று மேய்த்து
விளையாட வல்லானை; வரைமீ கானில்
தடம் பருகு கரு முகிலை; தஞ்சைக் கோயில்
தவ நெறிக்கு ஓர் பெரு நெறியை; வையம் காக்கும்
கடும் பரிமேல் கற்கியை நான் கண்டுகொண்டேன்—
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 3

பேய்த் தாயை முலை உண்ட பிள்ளை-தன்னை;
பிணை மருப்பின் கருங் களிற்றை; பிணை மான் நோக்கின்
ஆய்த் தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோவை;
அந்தணர்-தம் அமுதத்தை; குரவை முன்னே
கோத்தானை; குடம் ஆடு கூத்தன்-தன்னை;
கோகுலங்கள் தளராமல் குன்றம் ஏந்திக்
காத்தானை; எம்மானைக் கண்டுகொண்டேன்—
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 4

பாய்ந்தானை, திரி சகடம் பாறி வீழ;
பாலகன் ஆய் ஆல்இலையில் பள்ளி இன்பம்
ஏய்ந்தானை; இலங்கு ஒளி சேர் மணிக் குன்று அன்ன
ஈர் இரண்டு மால் வரைத் தோள் எம்மான்-தன்னை;
தோய்ந்தானை நிலமகள் தோள், தூதில் சென்று அப்
பொய் அறைவாய்ப் புகப் பெய்த மல்லர் மங்கக்
காய்ந்தானை; எம்மானைக் கண்டுகொண்டேன்—
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 5

கிடந்தானை, தடங் கடலுள் பணங்கள் மேவி;
கிளர் பொறிய மறி திரிய, அதனின் பின்னே
படர்ந்தானை; படு மதத்த களிற்றின் கொம்பு
பறித்தானை; பார் இடத்தை எயிறு கீற
இடந்தானை, வளை மருப்பின் ஏனம் ஆகி;
இரு நிலனும் பெரு விசும்பும் எய்தா வண்ணம்
கடந்தானை, எம்மானைக் கண்டுகொண்டேன்—
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 6

சூதம் - மாமரம்
சூதகம் - மாமரம்
சூர்மை - அச்சம், கொடுமை
சூல் - கருப்பம்
சூலிகை - சூலங்கள்
சூழ் குழல் - முடித்திருந்த கூந்தல்
சூழ் புனல் - எங்கும் பரவியிருக்கிற நீர்
சூழல் - இடம்
சூழி - முக படாம்
சூழும் கழல் - எல்லோரையும் தனக்கு அடிமையாக்கிக் கொள்ளும் திருவடிகள், எங்கும் பரவிய திருவடிகள்
சூறை - சுழல் காற்று

செ

செக்கர் - சிவந்த
செகுத்தல் - அழித்தல்
செங் கல் குன்றம் - சிவந்த இரத்தினக் கற்களையுடைய மேருமலை
செங்கேழ் உளை - சிவந்த பிடரி மயிர்
செங்கையாளன் - கொடையால் சிவந்த கையை உடையவன்
செஞ் சரங்கள் - செவ்விய பாணங்கள், இலக்குத் தப்பாத அம்புகள்
செஞ்சாலி - செந்நெற் பயிர்
செஞ்சொல் - எளிதாகப் பொருள் விளக்கும் சொல்
செண்டன் - சுபாவத்தை உடையவன், தன்மையை உடையவன், பூச் செண்டை உடையவன்
செந்திறத்த - செவ்விய
செந்நெற் கூழை - செந்நெற் பயிர், செந்நெற் பயிரினது தலைப்புறம்
செப்பு - பெட்டி, பாத்திரம், கரண்டகம்
செப்புதல் - சொல்லுதல்
செம்பியன் - சோழன்
செம் புனம் - நல்ல தினைப் புனங்கள்
செம்போத்து - ஒரு பறவை, கருடன் (செம்பருந்து)
செம்மல் - பெருமை, பழமை
செம்மல் போது - பெரிய பூ, பழம் பூ
செம் மொழி - இனிமையான உண்மை மொழி
செய் - வயல்
செய்கேன் - செய்வேன்
செய்தனகள் - செய்த காரியங்கள், செய்த வகைகள்
செய்ய - அழகிய
செய்வு அளவில் - செய்தபோது
செரு - போர், போர்க்களம்
செருக்களம் - போர்க்களம்
செரு நுதலூடு - போர்க்களத்தின் முனையில்
செருவர் - செருச் செய்பவர், போர் செய்யும் பகைவர்
செருவில் நிறை காத்தவன் - பாரத யுத்தத்தில் பாஞ்சாலியின் மானம் காத்தவன், சபதத்தை நிறைவேற்றியவன்
செல்கதி - மோக்ஷம்
செல்லா நல்லிசை - அழியாத புகழ்
செல உய்த்த பாதம் - செல்லும்படி தூக்கப்பட்ட திருவடி
செல எய்துவார் - அடைவார்
செல வைத்து - செல்ல வைத்து, அப்பாற்படுத்தி
செவ் அரத்த உடை ஆடை - மிகுந்த சிவப்பு நிறத்தை உடைய ஆடை, பீதாம்பரம்
செவ்வி - தக்க சமயம், பக்குவ நிலை, அழகு
செற்றம் - வெறுப்பு, பகைமை, துன்பம்
செற - சீறிக் கோபிக்க
செறித்திட்டு - தடுத்து, அணை கட்டி
செறுதல் - அழித்தல்
செறிந்தேன் - பொருந்தினேன், அடைந்தேன்
செறு - வயல்
செறும் - அழிக்கும் தன்மையுள்ள, கோபிக்கும் தன்மையுள்ள
சென்னி - தலை, உச்சி

சே

சே - எருது, காளை
சேடர் - இளமை பொருந்தியவர், யுவர்
சேடன் - இளைஞன்

சேடு - திரட்சி, கூட்டம், பெருமை, இளமை
சேண் விசும்பு - பரமபதம்
சேமம் - க்ஷேமம், காவல், நன்மை, பாதுகாப்பு
சேய் - சேய்மை; தூரம், முருகன், புதல்வன்
சேயன் - தூரத்தில் உள்ளவன்
சேரி - தெரு
சேல் - சேல் மீன்கள், கெண்டை மீன்கள்
சேல், கயல், வாளை - மீன் விசேடங்கள்
சேவகம் - வீரம்
சேழ் உயர்ந்த - மிக உயர்ந்த, ஆகாயம் அளாவிய, செழுமை மிக்க

## சொ

சொல் - வியாகரண சாஸ்திரம்
சொல் உயர்ந்த வீணை - நாதம் மிகுந்துள்ள வீணை
சொல் நீர - புகழை இயல்பாக உடைய
சொல்லுமா - சொல்லும்படி

## சோ

சோத்தம் - வணக்கம், அஞ்சலி பண்ணுவார் அதற்கு உசிதமாகத் தாழ்ச்சி தோற்றச் சொல்வதொரு வார்த்தை, தாழ்ந்தோர் துதியாகச் சொல்லும் சொல், தோத்திரம்
சோத்து - சோத்தம், அடைக்கலம், தோத்திரம்
சோமுச் செய்ய-சோம யாகம் முதலிய யாகங்களைச் செய்ய
சோர்தல் - ஒழுகுதல், சுழலல், சொரிதல்
சோர - சோர்வு அடையும்படி
சோலை - திருமாலிருஞ்சோலை

## ஞா

ஞாலம் - உலகம், பூமி
ஞாலம் உன்னி - உலகத்தாரால் நினைக்கப்படுபவன்

## த

தக்கணை - தட்சிணை
தக்கான் - தகுதியுடையவன்
தகவு - கிருபை, இரக்கம், நடுநிலை, தகுதி, தயை, உபகாரம்
தகு புகழ் - சிறந்த புகழ்
தகை - அழகு, அருள், பெருமை
தகைதல் - மேலே வளரவொட்டாமல் தடுத்தல்
தசக்கிரீவன் - இராவணன்
தஞ்சம் - எளிது, நிச்சயம்
தஞ்சு - தஞ்சம், பற்றுக்கோடு, ஆதாரம்
தஞ்சை மாமணிக் கோயில் - தஞ்சையிலுள்ள பெருமாள் கோயிலுக்குப் பெயர்
தட்ட - தடுத்த, அடைத்த
தட்டு அலர்த்த - இதழ் விரிந்த
தடத்த குழல் - பெரிய புல்லாங்குழல்
தடம் - தடாகம், குளம், பொய்கை
தடவந்து - தடவி
தடா - மிடா, பெரிய பானை
தடிந்த - அறுத்த, வெட்டிய
தண் - தண்மை, குளிர்ச்சி
தண்கா - திருத்தண்கா என்னும் திருப்பதி
தண்கால் - திருத்தண்கால் என்னும் திருப்பதி
தண்டம் - தண்டனை
தண்டு - கதை
தணரில் - நீங்கினுல்
ததும்புதல் - நிறைதல்
தம்பரம் அல்லன - தமது வயதுக்குப் பொருந்தாததான
தம்மன - தம்முடைய
தம்மானை - சுவாமியை
தம்மின் - கொடுங்கள்
தமர் - தங்களைச் சேர்ந்தவர்
தமிழோசை - தமிழ் மொழி
தரங்க நீர் - அலைகளை உடைய கடல்
தரணி - பூமி, உலகம்
தரணியாளன் - பூமியை ஆள்பவன், இராமன்

தாளம் - முத்து
தாதலம் - உலகம்
தரியாது - பொறுக்காது
தரு - கற்பக விருக்ஷம்
தருக்கிஞல் சமண் செய்து - வெறும் தர்க்கத்திஞல் தமது சமண்மதத்தை ஸ்தாபித்து
தருக்கு - தர்க்கம், செருக்கு
தலம் - இடம்
தலை இட - தலை கவிழ
தலைச்சங்கம் - தலைச்சங்கம் என்னும் திருப்பதி
தலைய - தலைமையான
தவ நெறிக்கு ஓர் பெரு நெறி - உபாயத்தை உணரப் பெரிய வழி காட்டியானவன்
தவ நெறியை - சிறந்த உபாயமாக விளக்குபவனை
தவம் - பக்தி
தவளம் - வெண்மை
தவிர ஓடி - கடந்து சென்று
தழல் நிற வண்ணன் - நெருப்பு வண்ணஞன ருத்திரன்
தழைப்ப - மிகுதியாக உண்டாக
தள்ளுதல் - தடுமாறுதல்
தளைத்து அவிழ் - கட்டு அவிழ்ந்த
தறி - கட்டுத் தறி
தறு கண் - வட்டணித்த கண், கொடிய பார்வை, அஞ்சாமை
தனம் - செல்வம்
தனி - ஒப்பற்ற
தனியன் - ஒப்பற்றவன்

## தா

தா - தாவி
தாங்குதல் - தடுத்தல்
தாசரதி - தசரத புத்திரன்
தாடாளன் - மேன்மையுள்ளவன், பெரியோன்
தாது - மகரந்தம், பூர் தாது
தாதை - தந்தை, தலைவன்
தாமம் - மாலை
தாமரைப் புலங்கள் - தாமரைப் பொய்கைகள்
தாமரையாள் - இலக்குமி
தாயான் - தாவியவன்
தாயின - தாவின, தாவி அளந்த
தார் - இதழ், பூ, மாலை, ஒளி
தாரம் - மனைவி
தாரா - ஒருவகைப் பறவை
தாரேன் - தாமாட்டேன்
தாரை - வரிசையாக ஒழுகுதல், வரிசை வரிசையாகப் பாய்தல், தேன் பெருக்கு
தாழ்ந்தது - தங்கிவிட்டது
தாழ் வரை - பக்க மலை
தாழம் - தாழ்த்தல், தாழ்ச்சி
தாள் அவிழ - பூட்டு விலகும்படி
தான் ஒருவன் ஆகிலும் - தான் ஒப்பற்றவஞக இருப்பினும்
தானவர் - அசுரர்
தானவர் உலகு - அசுரர் இருப்பிடம்

## தி

திங்கள் - சந்திரன், சந்திர மண்டலம்
திசைப்ப - திகைக்க, மயங்க
திடம் - வலிமை
திடல் - மணல் மேடு
திண் - திண்ணம்
திண் கை மா - வலிமை பொருந்திய துதிக்கையை உடைய யானை
திண் திறல் - மிக்க வலிமை
திண் படை - உறுதியான வாள்
திண்மை - வலிமை
திணம் - திண்ணம், உறுதி
திமில் - முசுப்பு, கொண்டை
திரளை - உருண்டை
திரிகால் சகடம் - உருளுகிற காலை உடைத்தான சகடம்
திரிதர்வேன் - திரிவேன்
திரிதருதல் - உலவுதல்
திரு - செல்வம், அழகு
திரு ஆகாரம் - திருவுக்கு இருப்பிடம்
திருத்தக்கீர் - திருமகளுக்குத் தக்கவாக உள்ளீர்
திருத்தனை - திருப்தியாகஇருப்பவனை
திருத்தாய் - அறுகூலிப்பாய், அழைப்பாய்

திருத்தி செய்து - திருப்தி உண்டாக்கி
திருநீர்மலை - ஒரு திருப்பதி
திருமலை ஒருமையான் - திருவேங்கடத்தில் நின்று எல்லோருக்கும் ஒக்கக் காட்சி கொடுப்பவன்
திருமால் - திருமகள் நாயகன்
திருவாளன் - திருமகளை மார்பில் கொண்டவன்
திரேதைக்கண் - திரேதா யுகத்தில்
திரை - அலை
திரைந்தான் - திரைந்த தோலினை உடையான், சதை சுருங்கினன்
திலதம்-திலகம்,நெற்றியிலிடும் பொட்டு
திவம் - பரமபதம்
திவள்தல் - விளங்குதல்
திளைக்கும் - நெருங்குகின்ற, விளையாடுகின்ற
திளைகொண்ட - பருத்திருந்துள்ள
திளைத்தல் - ஒரு தொழிலில் இடைவிடாது பயிலுதல், கூடி விளையாடல், நர்த்தனம் செய்தல்
திறந்து - பிளந்து
திறம் - தன்மை, சிறப்பு
திறம்பாமல் - தவறாமல்
திறல் - வலிமை
தினைத்தனையும் - தினையளவும்

## தீ

தீ - கெடுதி, தீமை, அக்கினி
தீ ஒல்கி - தீக் கொளுத்தி
தீத் தொழில் - அக்கினி காரியங்கள்
தீது - குற்றம்
தீம் - இனிய
தீர்த்தன் - பரிசுத்தமானவன்
தீவிகை - விளக்கு, நெருப்பு

## து

துகள் - தூசி
துகில் - ஆடை
துகில் படலம் - துணிகளால் ஆன கொடிகள்
துகைப்ப - மிதிக்க
துங்கம் - உயர்ச்சி
துங்கு - தங்கம், பெரிய
துஞ்சுதல் - தூங்குதல், இறத்தல்
துடி - பறை, உடுக்கை
துண் என - விரைவாக
துணரி நாழல் - பூங் கொத்துக்களையுடைய ஞாழல் மரம்
துணிவு - தெளிவு
துணை - துணைவன், பெட்டை
துணையாளன் - துணைவன்
துணைவர் - ஆபத் பந்து
துப்பன் - வலியோன்
துப்பு - வலிமை
துயர் - துன்பம்
துயில் கொளும் - தூங்கும்
துயில்தல் - தூங்குதல், மறைதல்
துரங்கம் - குதிரை
துரத்தல் - துரத்துதல்,செலுத்துதல், போக்குதல்
துலங்குதல் - விளங்குதல்
துவர் - சிவப்பு
துவர் ஆடை - செந்நிற ஆடை
துவரி - முள்ளிலவின் சிவந்த பூ
துவரி ஆடையர் - காவி உடையை அணிந்தவர்
துவரிக் கனி வாய் - இலவந்தம் பூப் போலவும்,கோவைப் பழம் போலவும், இருக்கிற வாய்
துவரித்த உடை - செம்மை நிறமான காவி உடை
துவரித்த உடையவர் - பௌத்தர்
துவரை - துவாரகை
துவலை - நீர்த் துளிகள்
துவள - வாடும்படி, சோரும்படி
துழாய் அலங்கல் - திருத்துழாய் மாலை
துழாய் வரும் - துழாவி வரும்
துள்ளு நீர் - தெறிக்கின்ற நீர்த் துளி, திவலை
துள - துள்ள
துளக்கம் - இடைவீடு, அசைவு
துளங்கல் - கலங்கல், துன்பம்
துளங்கா நிற்பன் - தடுமாறுவேன், கலங்குவேன்
துளங்குதல் - நடுங்குதல், விளங்குதல்
துளம் - மாதுளம் விதை, பீலிக்காம்பு
துளர் - களைக்கொட்டு

துளு - துள்ளு

துளை ஆர் கரு மென் குழல் ஆய்ச்சியர்- நீரிலே துளைத்தாடும் மென் கூந்தல் ஆய்ச்சியர், துளை பொருந்திய மென் கூந்தலையுடைய ஆய்ச்சியர்

துற்றிய - உண்ட

துற்றிலாமை - அனுபவித்து அறியாமை

துற்று - கவளம், உணவு

துறத்தல் - கைவிடுதல்

துன்றுதல் - நெருங்குதல்

துன்னுதல் - நெருக்குதல்

துனி - தீவினைகள்

தூ

தூ - தூய்மை, தூவி, சிறகு

தூங்கு ஆர் - தளர்ச்சி பொருந்திய, தமோகுணம் பொருந்திய

தூங்கு உறி - தொங்குகின்ற உறி

தூம்பு - துளை, உள்துளை

தூய - தூய்மையான, வெண்மையான

தூயான் - பரிசுத்தமானவன்

தூவி - சிறகு

தூளி - தூள்களை உடைத்தான

தூற்ற - இறையா நிற்க

தெ

தெங்கு - தென்னை

தெட்ட பழம் - பக்குவமான பழம், முற்றின பழம்

தெண் - தெளிந்த

தெய்வம் நாறும் - தெய்வத் தன்மை பொருந்திய, சிறந்த வாசனை வீசப் பெற்ற

தெரிக்கமாட்டேன் - தெரிந்து கொள் கின்றிலேன் - தெரிந்து கொள்ள முடியவில்லை

தெரிவைமார் - பெண்கள்

தெவ் - தெவ்வர், பகைவர்

தெழித்திட்டு - ஆரவாரம் செய்து

தெழிப்பு - ஆரவாரம்

தெள் - தெளிவு, தெளிந்த

தெள்கி - தேக்கி

தெள்ளிய - தெளிவை உடைய

தெள்ளியார் - தெளிந்த ஞானமுடையவர்

தெள்ளு நீர் - தெளிந்த நீர்

தெள்ளும் மணி - தெளிந்த ஒளியை உடைய இரத்தினம்

தெற்றல் - தெளிவுள்ளவன்

தென் - அழகு

தென் ஆலி - தெற்கேயுள்ள திருவாலித் திருப்பதி, அழகிய திருவாலி

தென் ஆனாய் - தெற்குத் திருமலையாகிய திருமாலிருஞ்சோலையில் நின்றருளினவனே

தென்புலர் - யமபடர்கள்

தென்ன என்று முரன்று - தென்ன என்று ஆளத்தி வைத்து, ஆலாபனம் செய்து

தென்னவன் - பாண்டியன்

தென்னன் தொண்டையர் கோன் - தென் நாட்டவனாகிய தொண்டைமான் சக்கரவர்த்தி

தென்னுடன் - பாண்டியன்

தே

தேசம் - உலகம், ஒளி

தேசு - ஒளி, அழகு, சிறப்பு

தே தென என்று - தென்ன தென்ன என்று

தேம் - தேன்

தேம்பல் இளம் பிறை - கலை குறைந்த சந்திரன்

தேம் பொழில்-தேனை உடைய சோலை

தே மருவு - தேன் பொருந்திய

தே மலர் - தேன் மிக்க பூ

தேர் வலம் - தேர் வலிமை

தேவு - தேவன்

தேற்றன்மை - தெளிவுத் தன்மை, மன உறுதி

தேறல் - தேன்

தேறாது - தெளியாது, நம்பாமல்

தேன் - வண்டில் ஒரு சாதி

தேனுகன் - ஓர் அசுரன், கழுதை வடிவாக வந்தவன்

தை

தைத்திரியன்-தைத்திரிய வேதத்தின் அர்த்த வித்து, தைத்திரிய உபநிஷத்தை அறிந்தவன்

தையல் - பெண்

### தொ

தொகு திரை - மிக்க அலைகள்
தொங்கல் - மாலை
தொடுத்த - சேர்ந்த
தொண்டர் - அடியார்கள்
தொண்டு - அடியார் செய்யும் தொண்டு
தொண்டு ஆம் இனம் - கைங்கரியம் செய்ய விரும்பும் அடியார் கூட்டம்
தொத்து - கொத்து, பூங் கொத்து
தொல் - பழமை
தொல் நெறி - பழமையான உபாயம், நிலை நின்ற உபாயம்
தொல்லை - பழமை
தொல்லைப் பழ வினை - அறவும் பழைய தான வினை, மிகப் பழமையான வினை
தொழுதி - கூட்டம், திரட்சியால் ஆன ஆரவாரம்
தொழுதும் - வணங்குவோம்
தொழுமின் - கையினால் கும்பிடுங்கள்
தொளி (தோளி) - சாவடி, நாற்சந்திகள், வீதி

### தோ

தோக்கை - முன்தானை, சேலைத் தலைப்பு
தோகை - மயில் இறகு
தோடு - இதழ், மடல்
தோளாத - துளைக்கப்படாத
தோளாத மா மணியை - தொளையிடப் படாத சிறந்த இரத்தினம் போன்றவனை
தோற்றக் குழி - கருப்பை, கர்ப்ப ஸ்தானம்
தோற்றம் - உருவம், அழகு
தோன்றல் - ஆடவருள் சிறந்தோன், புருஷோத்தமன், தலைவன்

### ந

நக்கன் - சிவபெருமான்
நக்கு - சிரித்து
நகுதல் - சிரித்தல், மலர்தல்
நகும் பரிசு - சிரிக்கும் படியாக
நகை செய - நகைக்க, பரிகாசம்செய்து சிரிக்க
நச்சுதல் - விரும்புதல்
நஞ்சம் - விஷம்
நஞ்சு - விஷம், நைந்து
நடம் - நடனம்
நடம் பயின்ற - கூத்தாடிய
நடலை - துன்பம்
நடை கற்ற - நடை பயின்ற, நடை பழகிய
நடையா - நடையாக, அன்றாட வேலையாக
நடையா வல்ல - நடக்குமாறு செய்ய வல்ல
நண்ணா - சேரமாட்டா
நண்ணாத - அணுகாத
நண்ணார் - பகைவர்
நந்த - கெட
நந்தனர் - நந்தகோபன்
நந்தா - ஒழியாத
நந்தாமல் - குறையாமல்
நந்தாமை - அழிவில்லாமை
நந்தா விளக்கு - அணையாத விளக்கு
நந்து - நத்தை
நந்துதல் - அவிதல், அணைதல்
நம் இடை - நம்மிடம், நம் பக்கல்
நம்பர் - நம் அன்பிற்குரிய தலைவர்
நம்ப வல்ல - உறுதியாக எண்ண வல்ல
நம்பன் - எல்லாராலும் விரும்பப்படுபவன்
நம்பி - நற்குணங்களால் நிறைந்தவன், பரிபூர்ணன், ஆதரித்து
நம்பிதன் நம்பி - கண்ணனுக்கு மூத்த பலராமன்
நம்பு - ஆதரி, விரும்பு
நமர் - நம்மைச் சேர்ந்தவர்கள்
நமன் தமர் - யமபடர், யமன் தூதர்கள்
நமனார் பாடி - யமன் உலகம்
நயந்து - விரும்பி
நயம் உடை நடை - அழகிய நடை
நரன் - மனிதன்
நல்கி - அருள் புரிந்து, அருள் கூர்ந்து
நல்குரவு - வறுமை, ஏழைமை
நலம் - இன்பம்

நலம் புரிந்து - அன்பு செய்து
நலன் - அழகு
நலியும் - வருத்தும்
நவிலுதல் - சொல்லுதல்
நள் - செறிவு, நெருக்கம்
நள் இருள் - நடு இரவு, இரவு,நெருங்கிய இருட்டு
நள்ள - செறிந்த, நெருங்கிய
நள்ளி - பெண் நண்டு
நளிர் - பெருமை, குளிர்ச்சி
நறவு - தேன்
நறை - தேன்
நனவு - விழித்திருக்கும் நிலை, தெளிவு
நனி - மிகுதி, மிக, பெருமை
நனை - அரும்பு, பூ மொட்டு

நா

நா - நாக்கு
நாகம் - யானை
நாகரிகர் - பெரு மதிப்புடையராய் இருப்பவர்
நாகு - பசு
நாஞ்சில் - கலப்பை
நாடி - தேடி, விரும்பி
நாடுதல் - ஆராய்தல்
நாதன் - சுவாமி
நாபன் - திரு நாபியை உடையவன்
நாமம் - புகழ், பெயர்
நாய் இனம் - நாய்க் கூட்டம்
நாராயணா என்னும் நாமம் - நாராயணா என்னும் திருமந்திரம்
நால் வேதம் - இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வணம்
நாவலம் புவி - நாவலர் தீவு
நாவாய் - திருநாவாய் என்னும் திருப்பதி
நாழல் - ஞாழல், குங்கும மரம்
நாள் - ஆயுள்
நாள் மலர் - புதிய தாமரை மலர்,அன்று அலர்ந்த மலர்
நாளும் - எக் காலத்தும்
நாற்றம் - வாசனை
நாறுதல் - வீசுதல்
நான்முகன் - பிரமன்
நான்று - தாழ்ந்து
நானம் - மஞ்சள்
நானா வகை - பல வகை
நானிலம் - பூமி

நி

நிச்சம் - தினந்தோறும்
நிசாசரர் - அசுரர்
நித்திலம் - முத்து
நிதிக் குவை - பொருட் குவியல்
நிமலன் - தூய்மையானவன்
நிமிர்த்தல் - தூக்குதல்
நிரந்தவர் - திரண்டு வருபவர்
நிரை - வரிசை, கூட்டம்
நிரைச் சந்தி - வரிசையாகச் சேர்ந் திருத்தலையுடைய
நிலத்திகழும் - நிலாவினுடைய விளங் குகிற
நிலம் தரம் செய்யும் - தரை மட்டமாக் கும், முழுவதும் ஒழிக்கும்
நிலவு - ஒளி
நிலவு எறிக்கும் - வெள் ஒளியை வீசும்
நிலவும் - விளங்கும்
நிலன் - நிலம், பூமி
நிலாத் திங்கள் துண்டம் - நிலாத்திங் கள்துண்டம் என்னும் திருப்பதி
நிலாயவர் - நிலைபெற்றிருப்பவர்
நிலை ஆர நின்றான் - உறுதியாக நின் றான்
நிலை ஆள் ஆக - நிலை பெற்ற அடிய வனாக
நிலை இடம் - நிலைத்து நிற்கக் கூடிய இடம்
நிவா - ஒரு நதி, வெள்ளாறு
நிறை - ஸ்திரீத்வம், நலம், குணபூர்த்தி, மன அடக்கம்
நிறைந்தேன் - குறைவற்றவனானேன், பூர்ணனானேன்
நிறைமொழி - பூர்ணமான வேதம்
நிறைவு - மனநிறை, அகவாயில் அடக் கம்
நின்மலன் - தூய்மையானவன்
நின்ற - எஞ்சிய, மிச்சமான
நின்றவா - நின்றவாறு, நின்றபடி

நீ

நீசன் - கீழ் மகன்
நீடு - உயர்ந்த, பெரிய
நீண்டவத்தை - நீண்ட அந்த வஸ்துவை
நீதி அல்லாதன - பாவங்கள்
நீர் - கடல், நீர்மை, தன்மை
நீர் ஆர் பேரான் - நீரைப் பற்றி வந்த நாராயணன் என்ற பேரை உடையவன், கடல் நீரில் கண் வளர்ந்தருளுபவன், நீர் வண்ணன்
நீர் மலி வையம் - கடல் சூழ்ந்த உலகம்
நீர்மை - தன்மை, இனிமை, நற்குணம்
நீரகம் - நீரகம் என்னும் திருப்பதி
நீலம் - நீலோற்பலம்
நீல மலர் - நீலோற்பலப் பூ
நீலன், சுடேணன் - வானரப் படைத் தலைவர்கள்
நீழல் - நிழல்
நீள் செல்வம் - மிக்க செல்வம்
நீள்வான் - நீண்டு வளரும் பொருட்டு
நீள் விசும்பு - பரம பதம்
நீள் விசும்பூடு - பெரிய ஆகாயத்தில்

நு

நுடங்குதல் - நடுங்குதல், துவள்தல், அசைதல்
நுண் - நுட்பம், மென்மை
நுண் நேர்மையான் - நுட்பமான பொருள்களைக் காட்டிலும் நுட்பமானவன்
நுண் பனி - சிறிய பனி
நுதல் - நெற்றி
நுதி - நுனி, முனை
நுழைதல் - உட்புகுதல்
நுளைப்பாவையர் - நெய்தல் நிலப் பெண்கள்
நுனக்கு - உனக்கு

நெ

நெகுவாய் - நெகிழ்ந்த வாயையுடைய, கட்டவிழ்ந்த வாயை உடைய
நெஞ்சகம் - நெஞ்சு, மனம்
நெஞ்சம் - மனம்
நெடுந்தகை - பெரிய சிறப்புக்களையுடைய இறைவன்
நெடு வெள்ளம் கொண்ட காலம் - பிரளயகாலம்
நெய் - எண்ணெய், கூர்மை
நெருநல் - நேற்று
நெறி - உபாயம்
நெறி வாய் - வழியில்
நென்னல் - நெருநல், நேற்று

நே

நேசம் - பக்தி
நேசன் - அன்புடையவன்
நேமி - சக்கரம்
நேர்த்தவன் - துணித்தவன்
நேரார் - பகைவர்

நை

நைதல் - வருந்துதல்
நைய - சிதிலமாக
நைவளம் - ஒரு வகைப் பண், குறிஞ்சி ராகம், நட்டபாடை
நைவிக்கும் - வருத்தும்

நொ

நொடி ஆம் அளவு - நொடிப் பொழுது, கணப்பொழுது

நோ

நோய் - துன்பம்
நோன்பியர் - சமணர், அருகர்

ப

பகடு - எருது, யானை
பகர்வித்தார் - கூப்பிடுவித்தார்
பகல் - சூரியன், நாள்
பகலவன் - சூரியன்
பகு வாய் - பெரிய வாய்
பங்கத்தாய் - பக்கத்திலே உடையாய்
பங்கம் ஆ - மானபங்கம் அடைய, மதிப்பறுத்து
பங்கயம் - தாமரை
பங்கு - பாகம், பக்கம்
பசுங் கதிர் - குளிர்ந்த ஒளி
பஞ்சவன் - பாண்டியன்
பட்டன் - பண்டிதன்

பட - இறக்க
படப்பை - தோட்டம்
படர் - பரப்பு
படர் பொருள் - பலவகையாகத் தோன்றிய பொருள்கள்
படல் - மூங்கிலால் அமைந்த தட்டி
படி - பூமி
படிறன் - வஞ்சகன், கள்வன், தீம்பன்
படிறு - தீமை
படு கடல் - முத்து முதலியன உண்டாகும் கடல்
படுதல் - தோன்றுதல்
படு திரை - உண்டாகின்ற அலை
படை - ஆயுதம், உழுபடையாகிய கலப்பை, கலப்பைக்கு அருகு கிடக்கும் நிலம்
படை தொட்டு - ஆயுதம் எடுத்து
படை நின்ற - கலப்பைக்கும் அருகு கிடக்கும் நிலத்தில் தப்பி நின்ற
பண் - இசை, இசைப் பாட்டு
பண்டம் - பொருள்
பண்டமாய்ப் பாடும் - சிறந்த பொருளாகக் கொண்டு பாடும்
பண்டி - வண்டி
பண்டு - பழமை, முன்னே
பண்டு பண்டுபோல் - பழையபடியே, முன்போல்
பண்டை - பழைய
பண்ணின்மேல் வந்த - அணிவகுப்போடு புறப்பட்டு வந்த
பண்ணை - மகளிர் கூட்டம்
பண்பாளன் - குணத்தை உடையவன்
பணங்கள் - படங்கள், படங்களையுடைய ஆதிசேஷன்
பணி - செயல், கைங்கரியம், தொண்டு
பணி கொண்டு - ஏவல் கொண்டு, அடிமை கொண்டு
பணித்த அருள் - சரம சுலோகார்த்தம்
பணிமின் - திருவடிகளில் விழுந்து வணங்குங்கள்
பணிலமணி - சங்கு ஈன்ற முத்துக்கள்
பணை - வயல், நீர்நிலை, முரசு, பல வாத்தியங்கள், மூங்கில், கிளை, பெருத்த
பணைத்த - பெருத்த
பத்தர் ஆவி - பத்தர்க்குத் தாரகன்
பத்திமை - பக்தி
பதங்களின் பொருள் - பதங்களின் பொருளாக உள்ள உயிர்-வருக்கம்
பதம் - உணவு
பதம் மிகு பரி - பருவம் நிரம்பிய குதிரை, குதிரை வடிவாக வந்த கேசி என்னும் அசுரன்
பதலை - கலசம், கும்பம்
பதி - இருப்பிடம்
பதின் குடம் - பத்துக் குடம்
பதுமம் - தாமரை
பந்தம் - தொடர்பு, பந்துக்கள், உறவினர், ஆசை
பப்ப - இகழ்ச்சிச் சொல், நிந்தை மொழி
பயந்தான் - பெற்றவன்
பயலை - பசலை, துன்பம், விரக-வேதனை, பிரிவினால் ஏற்பட்ட உடலின் நிற வேறுபாடுகள்
பயிலா - நில்லா, பொருந்தா
பயிற்றிய நாடகம் - பயிற்சி செய்கின்ற நாடகம், பழகிய நாடகம்
பரக்கழிகை - பழி விளைக்கை
பரக்கழிந்தாள் - பெரும் பழிக்கு இடம் ஆனாள், பழிக்கு . அஞ்சாதவள் ஆனாள், அடக்கத்தை விட்டாள்
பரம் அன்று - தக்கது அன்று
பரமன் - மேலோன்
பரல் - பருக்கைக் கல்
பரவி - துதித்து
பரவை - பரப்பு, கடல்
பரவைத் திரை - பரந்திருக்கிற அலைகள்
பரன் - மேலானவன்
பரி - விரைவு, குதிரை
பரிதி - சூரியன்
பரிதி வட்டம் - சூரிய மண்டலம்
பரிசு - தன்மை
பரிமா - விரைவாகச் செல்லும் குதிரை
பரிமுகமாய் - குதிரை முகத்தோடு இருந்து, ஹயக்கிரீவ அவதாரம் ஆகி
பரிய - பருத்த
பரியோன் - பருத்த உடலையுடையவன்

பருந் தாள் - பெரிய கால்
பல்லவம் - தளிர்
பல்லாண்டு இசைப்ப - மங்களாசாஸனம் பண்ண, வாழ்த்துக் கூற
பலங்கனி - பலாப் பழம்
பலவு - பலா
பவ்வத் திரை - கடல் அலை
பவ்வம் - கடல்
பவளத் திரள் - பவளக் கூட்டம்
பவளத் தூணை - பவளம்போன்று இனியனும், தூண்போன்று தாரகனும் இருப்பவனை
பவனம் - காற்று, ஆகாயம்
பவித்திரன் - தூய்மை உடையவன்
பழ நடை - பழைய முறை
பழனம் - நீர்நிலை, வயல்
பழுத்தொழிந்தேன் - பக்குவன் ஆகிவிட்டேன்
பழுது - வீண்
பழுதுபோய் - பயனற்றவைகள் ஆகி
பள்ளி - கோயில், படுக்கை
பள்ளிக் குறிப்பு - தூங்குவதற்கு உரிய அடையாளங்கள்
பற்று - பற்று ஆக, பற்றுக்கோடாக, தஞ்சமாக
பற்று அறுத்து - ஆசையைப் போக்கி
பறை - போரில் அடிக்கப்படும் வாத்தியம்
பறையும் - அழிந்துவிடும்,தேய்ந்துவிடும்
பன்னு கலை - விரிவாகச் சொல்லப்படுகின்ற கலைகள்
பன்னுதல் - சொல்லுதல், விரிவாகக் கூறுதல், ஆராய்தல்
பனி - குளிர்ச்சி, வருத்தம், நீர்த்துளி, கண்ணீர்
பனி எய் பரங்குன்று - இமய மலை
பனிகாத்த - மழையில் காத்த
பனி படைக்கும் - வருத்தத்தை அடையா நிற்கும்
பனி மலர் - குளிர்ந்த மலர்
பனுவல் - நூல், பாடல்கள்
பனுவல் கவிதை - இலக்கண நூல் முறைப்படி அமைந்த கவிதை

பா

பா - பரப்பு
பாகம் - பாதி, ஒரு பகுதி
பாங்கு - தன்மை
பாசடை - பச்சை இலை
பாசம் - ஆசை
பாசனம் - பாத்திரம்
பாடகம் - காலில் அணியும் ஓர் ஆபரணம், சிலம்பு, மகளிர் காலணி
பாடா வருவேன் - பாடிக்கொண்டு வருவேன்
பாடி - ஊர்
பாடு - பக்கம்
பாடு இல் - தூக்கம் இல்லாத
பாண் - பாட்டு
பாணனர் - பாணன், தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே ஊடல்போக்கிக் கூட்டுவிப்போன்
பாணு - பாட்டாக
பாதமர் - பாதம் அமர்,திருவடிகளிலே பொருந்திய
பாந்தள் பாழி - பாம்புப் படுக்கை
பார் - பூமி, உலகம், தீவு
பார் ஆர் உலகம் - மண் செறிந்த இந்த உலகம்
பார்த்தன் - அருச்சுனன்
பார் மகள் - பூமி தேவி
பாரகம் - பூமி
பாரதம் - பாரதப் போர்
பாரித்து எழுந்த - பெரிதாக மதித்துப் போருக்கு வந்த
பாருருவி - கடினமான பூமி
பால் மதி - வெண்மையான சந்திரன்
பாலம் ஆய் - பகுதியை அடைந்தோமாய்
பாலை - பாலைப் பண்
பாவம் - தீவினை
பா வளரும் - சந்தங்கள் நிறைந்த
பாவியாது - தடுமாறாமல், அத்தைச் செய்வோமா இத்தைச் செய்வோமா என்று அலைந்திடாமல், சிந்தியாமல்

பாவு - பரவிய
பாவை - விளையாட்டுப் பொம்மை, மரப் பாச்சி
பாவைமார்கள் - பதுமை போன்ற பெண்கள்
பாழி - வலிமை, படுக்கை
பாழிமையான - பெரிய, மேன்மையான
பாற்று - அழிப்பாயாக, சிதறச் செய்
பாறி வீழ - அழிந்து விழ
பான்மை - தன்மை, நிலை
பானல் - நீல மலர், கருங்குவளை மலர்
பானு - சூரியன்

பி

பிச்சச் சிறு பீலி - இறகான சிறு பீலித் தழையை
பிச்சம் - இறகு, குடை
பிஞ்ஞகன் - சிவன்
பிடி - பெண் யானை
பிண்டம் - தொகுதி, காரண நிலை
பிண்டி - அசோக மரம்
பிண்டி ஆர் மண்டை - உளுத்த பொடிகள் உதிருகிற தலையோடு
பிண்டியார் - சமணர்
பிணக்குதல் - மாறுபடுதல்
பிணந்தின் மடவாரவர்போல் - பேய்ப் பெண்களைப் போல்
பிணி - துன்பம், நோய், கட்டு, பிணிப்பு
பிணை - பெண் மான், இரண்டு, பெண்
பிணை மருப்பு - ஒன்றோடொன்று சேர்ந்த கொம்பு
பிணை மான் - பெண்மான்
பிரசம் - தேன் கூடு, தேனீக்கள், வண்டு
பிரசவாரி - தேன்கூட்டிலுள்ள தேன்
பிராக்கள் - பெருமான்
பிரான் - உபகாரம் செய்பவன்
பிரிக்ககிற்பவர் - பிரிக்க வல்லவர்கள்
பிலம் - பாதாளம், மலைக் குகை
பிள்ளை - குஞ்சு, குட்டி, குழந்தை, பெண், மகள்
பிள்ளை பரம் - பிள்ளையின் தரம்
பிள்ளைமை - பிள்ளைத் தன்மை
பிளவு எடுத்த - பிளந்த
பிளிற - முழங்க
பிறங்கு இருள் - மிக்க இருள்
பிறங்குதல் - விளங்குதல்
பிறப்பிலி - பிறப்பு இல்லாதவன்
பிறவாத பேராளன் - கருமம் காரணமாகப் பிறப்பையுடையவன் ஆகாத பெருமை பொருந்தியவன், பிறவாமையைத் தருகின்ற திருநாமங்களை உடையவன்
பின் தோன்றல் - தம்பி
பின்னும் இராமன் - பலராமன்
பின்னை - நப்பின்னை

பீ

பீலி - தோகை, மயில் இறகு
பீளை - கண்ணிலிருந்து வரும் அழுக்கு
பீனம் - பெரிய, பருத்த

பு

புகப் பாய்ச்சி - செல்லும்படி இட்டு
புகர் - ஒளி
புகழ்தக்கோர் - புகழப்படுவோர்
புடை - பக்கம்
புடை பெயர - அசைய
புடையுண்டு - அடிபட்டு
புண் - மாமிசம்
புணரி - அலை
புணரி ஓதம் - கடல் அலைகள்
புத்தர் - பௌத்தர்
புத்தேளிர் - தெய்வம்
புதம் - அம்புதம், மேகம்
புதம் செய்து - தாவுதலைச் செய்து
புதல் - புதர்
புந்தி - புத்தி, அறிவு
புயல் - மேகம்
புரந்தான் - இந்திரன்
புரவி - குதிரை
புராணர் - பழமையானவர்
புரிசை - மதில்
புரையும் - ஒக்கும்
புல் - புறத்தில் வயிரமுள்ள மூங்கில், பனை முதலியன
புல்குதல் - தழுவுதல், பொருந்துதல்

புல்லாணி - திருப்புல்லாணி (புல் அணை என்பது புல்லாணி ஆயிற்று என்பர். புல் அணை - தர்ப்ப சயனம்)
புல்லுதல் - தழுவுதல்
புலம் - வெளி நிலம், அறிவு
புலம்புதல் - சப்தித்தல், வருந்துதல்
புலமங்கை - நீளா தேவி, பூமிப் பிராட்டி
புலவி - புடவி, பூமிப் பிராட்டி, வருத்தம், துக்கம்
புலவு கானல் - புலால் நாற்றம் வீசும் கடற்கரைச் சோலை
புலன் - ஐம் பொறிகள்
புவி - பூமி
புவனம் - உலகம்
புழைக்கை-துளையுடைய கை: துதிக்கை
புள் - பறவை, பறவையாகிய பகாசுரன்
புள் பாகன் - கருடப் பறவையை வாகனமாக உடையவன்
புள்ளுவன் - வஞ்சகம் உடையவன்
புறவம் - புறா, தோட்டம், தோப்பு
புறவு - சோலை, தோட்டம், பக்க இடங்கள், முல்லை நிலம், பர்யந்தங்கள், முல்லைக்கொடி
புறன் உரை - பொருள் அற்ற சொல்
புன் சொல் - இழிவான சொல்
புனம் - கொல்லை
புனல் - நீர்
புனல் கயத்த - நீரை உடைய குளத்தில்
புனிதன் - பரிசுத்தமானவன்
புனை - ஒப்பனை, அழகு, புன்னை

## பூ

பூ - பொலிவு, அழகு
பூசல் - போர்
பூண் - ஆபரணம்
பூணாது - கட்டுத்தறியில் சேராது
பூம் பொழில் - பூஞ்சோலை
பூ மங்கை - இலக்குமி
பூ மரு கோலம் - பூப்போல மென்மையான அழகு
பூ வளரும் திருமகள் - தாமரை மலரில் தோன்றிய திருமகள்
பூவை - காகணவாய்ப் புள், கவுதாரி, காயாம்பூ
பூழியன் - சேரன்
பூளை - பூளைப் பூ, பூளைப் பூண்டு

## பெ

பெடை - பெண் பறவை
பெண்ணை - பனை
பெண்மை - பெண் தன்மை
பெருந்தகை - பெரியோன், தலைவன்
பெருந்தகைப் பிரிதி - சிறப்புப் பொருந்திய பிரிதி
பெருந் திசை - பரந்த திக்குக்கள்
பெரு நகர் - திருப்பேர் நகர்
பெருநீர் - கடல்
பெரு நெறி - நல்ல உபாயம்
பெரும் பதம் - பெரிய நிலை
பெரும் புறக் கடல் - இந்த அண்ட கோளத்துக்கு அப்பாற்பட்டுச் சுத்த நீராக உள்ள கடல்
பெருமகள் - பூதேவி
பெற்றம் - பசு
பெற்றார் - பெற்றோர், தாய் தந்தையர்
பெறும் தகையேற்கு - பெற்றால் உயிர் வாழும் தன்மையுள்ள எனக்கு

## பே

பேடை - பெண்
பேணா - விரும்பாத
பேணுதல் - விரும்புதல்
பேதியா - வேறுபடாத
பேதை - அறிவில்லாதவன், அறிவில்லாதவள், பேதைப் பருவம் உடைய பெண்
பேர் - திருப்பேர் என்னும் திருப்பதி
பேர் அணிந்து - பெருங் கூட்டமாகக் கூடி, திருநாமத்தை அழகுபடச் சொல்லி
பேர் அழல் - பெரிய வடவா முகாக்கினி
பேரகம் - திருப்பேரகம் என்னும் திருப்பதி
பேராளன் - புகழை உடையவன், பெருமையை உடையவன், இறைவன், பெரியோன்
பேரான் - திருப்பேர் நகரில் உள்ளவன்
பேழ் வாய் - பெரிய வாய்

### பை

பை - படம்
பைங் கிளி - பச்சைக் கிளி
பைம் பொழில் - பசுமையான சோலை

### பொ

பொங்கத்தம் பொங்கோ - வென்றவர் வெற்றியைத் தோற்றவர் சொல்லிப் பறையடித்துக்கொண்டு ஆடும்போது உண்டாகும் ஒலிக் குறிப்பு
பொங்கு எறு - பெருகி மேன்மேல் வளருகிற
பொங்குதல் - விளங்குதல்
பொடிபடுத்து - பொடியாகச் செய்து
பொதி அறை - (பொதிந்துள்ள இடம்) கொள்கலம்
பொதும்பு - பொதும்பர், சோலை, புதர்
பொதுளி - செறிந்து, ஒன்று கூடி
பொரு - ஒப்பு
பொருந்தலன் - பகைவன்
பொருப்பு - மலை
பொருள் - இறைவன் அருள், மீமாம்சை
பொல்லான் - அழகற்றவன், விகார வடிவன்
பொலன் கொள் - பொன் ஆபரணங்களைக் கொண்ட
பொழில் - சோலை, பூமி, உலகம்
பொழில் சோலை - நெருங்கிய தோட்டங்கள்
பொழில் தாழ்வர் - சோலை இடங்களில், பொழிலின் பக்கங்களில்
பொள்ளை - துவாரம், துளை
பொள்ளைக் கரம் - துதிக்கை
பொறி - புள்ளி
பொறுக்ககில்லேன் - பொறுக்கமாட்டேன்
பொறை - பொறுமை, பாரம்
பொன் - அழகு, பசலை நிறம்,
பொன் அம் கலை - பொன்னாலே செய்யப்பட்ட அழகிய பரியட்டம், பீதாம்பரம்
பொன் உலகம் - அழகிய உலகம், பரமபதம்
பொன் நிறத்து உரவோன் - இரணியன்
பொன் நிறம் ஆவது - பசலை படர்வது
பொன் படம் - பொன் ஆடை, பசலை நிறம்
பொன் பயந்து - பொன் அடைந்து, பசலை பார்த்து
பொன் மலர் - அழகிய மலர்
பொன்றுதல் - இறத்தல், அழிதல்
பொன்னம் சேர் - விரும்பத் தக்க, அழகிய
பொன்னன் - இரணியன்
பொன்னி - காவிரி

### போ

போகல் ஒட்டேன் - போகவிடேன்
போத - வருக. மிகுதியாக
போதகம் - யானை
போதா - வர, எழுந்தருள
போதி - அரசமரம்
போதியார் - பௌத்தர்
போது - அலரும் நிலையிலுள்ள அரும்பு, புதுப் பூ, பொழுது, காலம்
போது ஒரு கால் - சிறிது பொழுதும்
போது செய்து - அமுது செய்து
போதும்கொலோ - வருவானோ
போது மறுத்து - காலம் தவறி
போல் - உரையசை
போழ் பட - பிளவுபட
போற்றி என்னாது - வாழ்க என்று வாழ்த்தாது

### பௌ

பௌவம் - கடல்
பௌழியன் - பௌஷீதகி ப்ராஹ்மணத்தின் அர்த்தவித்து, பிருஹதாரண்யக உபநிஷத்தை அறிந்தவன்

### ம

மகர குண்டலங்கள் - மீன் வடிவாகச் செய்யப்பட்ட குண்டலங்கள்
மகரம் - மகரமீன், சுறு
மங்குல் - மேகம், ஆகாயம்
மஞ்சு - மேகம்
மஞ்ஞை - மயில்
மட்டு - தேன்

மட்டையர் - மொட்டைத் தலையர்
மடங்கல் - சிங்கம்
மட நாகு - இளம் பசு
மட நோக்கி - மென்மையான பார்வையை உடையவள்
மடப்பம் - இளமை
மட மகள் - மென்மை பொருந்திய பெண், யசோதை
மடல் - இதழ், பாளை
மடவரல் - மென்மைத் தன்மையை உடையவள், பெண்மைக் குணம் நிரம்பியவள்
மடிய - இறக்க
மடுப்ப - கொடுக்க, வைக்க
மண் - பூஉலகம்
மண் அகலம் - பூமிப் பரப்பு
மண் சுமந்த வட குன்று - பூமியைத் தரிக்கின்ற மேரு மலை
மண்ட - திரள
மண்டலம் - உலகம்
மண்டி - நிறைந்து, செறிந்து, மிகுந்து, பரவி, பொருந்தி
மண்டுதல் - நெருங்குதல், நிறைதல்
மண்ணி - மண்ணி ஆறு
மணந்து - கூடி
மண நோக்கம் - காதல் நோக்கம், மகிழ்ச்சி நோக்கம்
மணம் - திருமணம்
மணி - இரத்தினம், அழகு
மணி அறை - மாணிக்கப் பாறை
மணி நிறம் - அழகிய நிறம்
மதம் - செருக்கு
மதலை - குழந்தை, மகன், பிள்ளை, பிள்ளைத் தூண், தூணின்மேல் வைக்கும் போதிகை
மதி - சந்திரன்
மதிக்கிலேன் - அளவிட்டுச் சொல்ல அறியேன்
மதியம் - சந்திரன்
மதுகரம் - வண்டு
மந்தம் - மந்தாரம்
மந்த மாருதம்-மெதுவாக வீசும் காற்று, தென்றல்
மந்தரம் - மந்தர மலை
மந்தாரம் - மந்தார மரம்
மந்தி - பெண் குரங்கு
மயில் தழை - மயில் தோகை
மயிலை - மயிலாப்பூர்
மர்க்கடம் - குரங்கு
மரக்கால் கூத்து - மரத்தால் செய்த காலைக் கட்டிக் கொண்டு ஆடும் கூத்து
மரதகம் - மரகதம், பச்சை இரத்தினம்
மரு - வாசனை
மருங்கு - பக்கம்
மருங்குல் - இடை
மருப்பு - கொம்பு
மருவார் - பகைவர்
மருவினிய - மருவ இனிய, அடைவதற்கு இனிமையான, அனுபவிப்பதற்கு இனிய
மருள் - இசை வகை, இந்தளப் பண்
மருளைக் கொடு பாடி - மருள் என்னும் பண்ணைப் பாடிக்கொண்டு, மயக்க வல்ல பாட்டைப் பாடிக்கொண்டு
மல் - மல்லர்கள், வலிமை
மல் அமர் - மற்போர்
மல்கிய - பெருகியிருக்கிற
மல்கும் - பெருகும்
மல்லல் - மிகுதி, வளப்பம்
மல்லை - வளப்பம், வளம்
மலங்க - கலங்க, தடுமாற, கெட, நிலைகுலைய
மலங்கு - விலாங்கு, ஒருவகை மீன்
மலங்குவித்த - கலங்கும்படி செய்த
மலர் அணை - பூம் படுக்கை
மலர் வைகு கொடி - திருமகள்
மலி - மிகுதி
மலிதல் -நிறைதல்
மலிவு எய்தல் - நிறைந்திருத்தல்
மலை குலாம் மாடம் - மலையை ஒத்த மாளிகைகள்
மலைத்த - பொருத
மலை மங்கை - பார்வதி
மழ - இளமை
மழ களிறு - இள யானை
மழலை - மழலைச் சொல், குதலைச் சொல்
மழவிடை - இளங் காளை

மழுவாளி - மழுவைக் கையில் ஏந்திய சிவன்
மழை - மேகம்
மழை முகில் - கரிய மேகம், குளிர்ந்த மேகம், காளமேகம்
மள்ளர் - உழவர்
மறக்கேன் - மறவேன்
மறம் - வலிமை
மறி - மான் குட்டி
மறுகி - அஞ்சி, தடுமாறி
மறுகு - தெரு
மறை உடை - மாறுபாட்டை உடைய
மன் - மன்னர், அரசர்
மன்றம் - பலர் கூடும் இடம், பெரிய வீதி
மன்று - சபை, பொது இடம், நாற்சந்தி, வெளி இடம், திரளும் இடம்,கூட்டம்
மன்னு - நிலை இல்லாத
மன்னுதல் - நிலை பெறுதல்
மனம்செய் இன்பம் - மனத்தை மூழ்கு விக்கும் இன்பம்
மனம் வழங்கும் - மனத்தை அர்ப்பணம் செய்யும்
மனன் - மனம்

மா

மா - அழகு, விலங்கு, மான், மா மரம், குதிரை, கருமை
மா இருங் குன்றம் - மிகப் பெரிய மலை
மா இருஞ்சோலை - திருமாலிருஞ் சோலை
மாகம் - ஆகாயம், பரமாகாசம் என்னும் பரமபதம்
மாசுணம் - பாம்பு
மாட்டினேன் - மாள்வித்தேன், ஒழித் தேன்
மாடு - பக்கம், செல்வம்
மாண் - மாணி, பிரமசாரி, மாட்சிமை
மாண்டார் - இறந்தார்
மாணி - பிரமசாரி
மாத்து அமர் பாகன் - யானைமேல் அமர்ந்துள்ள பாகன்
மாத்தொழில் - பரிமாவாக வந்த கேசி யின் தொழில்
மாதவி - குருக்கத்தி
மாதிரம் - திசை, திக்கு
மாது - பெண்
மாந்தி - குடித்து, உண்டு
மா நகர் - பெரிய நகரம்
மாம் பிணை - மாமரக் கிளை
மா மதலை - இளம் பிள்ளை, குழந்தை
மா மழை - பெரு மழை
மா முகடு - அண்ட பித்தி
மா முனி கொணர்ந்த கங்கை - பகீரதன் உலகுக்குக் கொண்டுவந்த கங்கா நதி, விசுவாமித்திர முனிவரால் இராம லட்சுமணர்களை இட்டுக்கொண்டு வருவதற்கு இடமான கங்கை என் றும் உரைப்பர்
மாயம் - வஞ்சகமான செயல்கள்
மாயன் - ஆச்சரியமான குணத்தையும் செயல்களையும் உடையவன்
மாரி - மழை, மேகம்
மாருதம் - காற்று, தென்றல்
மால் - திருமால், மயக்கம், பெரிய
மால் உரு - பெரிய வடிவம்
மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலை
மாலும் கடல் - அலைகள் ஒன்றோ டொன்று மோதிக் கலக்கும் கடல்
மாலை - பூமாலை, மலர் நெருங்கத் தொடுத்த மாலை
மா வலம் - பெரு வலி
மா வளம் - பெரிய செல்வம்
மாழை - இளமை, மான்
மாள - இறக்க
மாளிகை - வீடுகள்
மாற்றம் - சொற்கள், மறு மாற்றம், சொல்லும் சொல்
மாற்றரசர் - பகை அரசர்
மாறு - பகை, ஒப்பு
மான் கொண்ட தோல் - மான் தோல்
மானம் - பெருமை, துன்பம், ஒப்பு
மானவர் - மனிதர்

மி

மிக்க சீர்த்தொண்டர் - அநந்யப் பிரயோ ஜனரான ஸ்ரீ வைஷ்ணவர்கள்
மிடைதல் - செறிதல், நெருக்குதல், திரளுதல்

மிண்டி - நெருங்கி
மிதியில் - அடி வைத்ததும்
மிழற்றுதல் - ஒலித்தல், கூவுதல்
மிளே - சிறு தூறு
மிறை - துன்பம்
மின் - மின்னல்

மீ

மீ - மேல்
மீது - மேலே

மு

முகடு - உச்சி, சிகரம்
முகந்து - மொண்டு
முகப்பு - முன், எதிர்
முகில் - மேகம்
முசு - குரங்குகளில் ஒரு சாதி
முடி - கிரீடம், நாற்று முடி
முடை - முடை நாற்றம், மாமிச நாற்றம்
முண்டம் - தலே-ஓடு
முத்தின் திரள் கோவை - திரண்ட முத்து மாலே
முத் தீ - ஆகவநீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம்
முதல் அரிய - வேரோடு போக்க, முழுவதும் ஒழிக்க
முதலார்கள் - முதன்மையான பிரமன் முதலானவர்கள்
முதலோடு வீடும் - தொடக்கமும் முடிவும்
முது கயம் - கடல்
முது நீர் - பழைய நீர், பழைய நீரை உடைய குளங்கள், வற்ருத ஆழ்ந்த நீருள்ள குளங்கள், கடல்
முது வெள்ளம் - பிரளய காலம்
முந்தி - முற்பட்டு
முந்து நூல் - பழமையான வேதம்
முந்துற - முற்பட
மு நீர் - முந்நீர் - கடல்
முப் புரி நூல் - பூணூல்
முரசம் - முரசு, ஒரு வாத்திய வகை
முரண் - வலிமை
முரல்தல் - ஒலித்தல், ரீங்காரம் செய்தல்
முரியும் - மடங்கி விழும்
முருக்கு - முருக்கம் பூ, பலாசம் பூ
முருகு - தேன்
முல்லேப் பிள்ளே - முல்லேயின் இளஞ் செடி, முல்லேக் கொடி
முழவு - மத்தளம்
முழுசி - முழுகி
முழுசிய பறவை - மூழ்கிய வண்டு
முழுது - முழுவதும்
முழுநீர் - நிரம்பிய நீரை உடைய கடல்
முழு நீலம் - பெரிய நீல மலர்
முழை - குகை
முள் எயிறு - முளேக்கின்ற பற்கள்
முளரி - தாமரை
முளரிக் கூட்டகம் - தாமரை இதழ்களால் கட்டப்பட்ட கூடு
முளிந்தீய்ந்த - காய்ந்து கரிந்துபோன
முளேக் கதிர் - பால சூரியன்
முற்ற மூத்து - மிகவும் மூப்பு அடைந்து
முற்ரு மா மதி - கலே நிரம்பாத சந்திரன்
முற்றில் - சிறு முறம்
முற்று ஆரா - முழுதும் நிரம்பாத
முறுகி - மேலிட்டு
முறுவல் - பல், புன்சிரிப்பு
முறுவலிக்கும் - மலர்கிற, புன்முறுவல் செய்யும்
முறை கெட - முறைமையானது கெட, மரியாதை அழிய
முறை சொலும் - முறை சொல்லிக் கற்கும்
முன் இமை - மேல் இமை
முன்னும் இராமன் - பரசுராமன்
முன்னுவர் - அடைவர்
முன் விலகும் - முற்படுவார் திடுக்கிட்டு விலகும்படி
முன்றில் - முற்றம்
முனிதல் - கோபித்தல்
முனியாளர் - (சனகர் முதலிய) முனிவர்கள்
முனிவன் - இடைவிடாத சிந்தனேயை உடையவன், மனனம் பண்ணுபவன்
முனிவு - கோபம்

முனை - போர் முகம்
முனைத்த சீற்றம் - மிக்க கோபம்
முனை முகத்து - போரில்
முனைவன் - தலைவன்

மூ

மூசி - மொய்த்து
மூரி - வலிமை
மூவா - மூப்பு அடையாத
மூவா உரு - இளைய உரு, அழியாத வடிவு
மூவாமை - இறந்து படாதபடி, தன் புறுதபடி
மூவெழுகால் - இருபத்தொரு தலை முறை
மூழ்த்த நாள் - கடல் நீர் பெருகி உலகை மூடிய காலம், கடல் உலகங்களை மூழ்கடித்த பிரளய காலம்
மூள - புகையும்படி

மெ

மெய்யம் - திருமெய்யம் என்னும் திருப் பதி
மெய்யமலை - திருமெய்யம் என்னும் மலை
மெள்ள - மெதுவாக

மே

மேகலை - அரையில் அணியும் ஆபரணம்
மேதிகள் - எருமைகள்
மேல் விளை கொண்டு இருமி - பெருஞ் சப்தத்தோடு இருமி
மேவா அரக்கர் - காரணமின்றிப் பகை கொள்ளும் அரக்கர்
மேவான் - பொருந்தாதவன்

மை

மைத்த - மையின் தன்மை வாய்ந்த
மைதிலி - மிதிலையில் பிறந்தவள், சீதாப் பிராட்டி
மைந்தன் - இளமைத் தன்மை உடையவன், இளையோன்
மைந்தனர் - இளமையை உடையவர், வீரத்தை உடையவர்
மைந் நம்பு - மை தீட்டப்பெற்ற
மைம்மான மணி - மையை ஒத்த நீல இரத்தினம்

மொ

மொத்துண்டு - அடிபட்டு
மொய் - அழகு
மொய்த்தல் - நெருங்குதல்

மோ

மோதரக் கையால் - மோதிரம் அணிந்த கையினால்
மோழை - குமிழி

மௌ

மௌவல் - முல்லை

யா

யாதானும் - ஏதேனும்
யாமம் - ஜாமம்
யாய் - தாய்
யானை உரி உகந்தான் - சிவன்

வ

வக்கரன் - தந்தவக்கிரன் என்னும் அசுரன்
வகிர் - பிளவு
வகிர்தல் - பிளத்தல்
வகுளம் - மகிழம் பூ
வகை - வழி, உபாயம்
வங்கம் - கப்பல், மரக்கலம், அலை
வசை - குற்றம்
வஞ்சம் - வஞ்சனை, வஞ்சகம்
வஞ்சனம் - வஞ்சனை, கபடம்
வட்டு - கருப்புக் கட்டி, ஆடும் வட்டு
வட அரசு - பல்லவ மன்னன்
வட ஆனாய் - வட திருமலையாகிய திரு வேங்கடத்து நின்றவனே
வட குன்று - மேருமலை
வட புலம் - வட நாடு
வடமரம் - ஆலமரம்
வடமலை - திருவேங்கடம்
வடவரை - திருவேங்கடம்
வடி - கூர்மை

வடிவு - அழகு
வண்ண ஒண் தமிழ் - இசையோடு கூடிய சிறந்த தமிழ்ப் பாடல்
வண்ணம் - நிறம், தன்மை
வண்மை - கொடை
வதரி ஆச்சிரமம் - பதரிகாசிரமம்
வதுவை - திருமணம்
வந்திக்கும் மற்றவர்க்கும் - பௌத்தர்களுக்கும் 'வந்தே' என்றால் போலக் கூறுபவர்கள்
வம்பு - மணம், புதுமை
வயிற்றுக் குழி - கருப் பை ஆகிற குழி
வரம் - சிறப்பு
வரம் தா - வேண்டியதைத் தா
வரன்ற - தள்ள
வராகம் - பன்றி
வரால் - ஒருவகை மீன்
வரி - அழகு, கோடு
வரி அரவு - உடல் ரேகையை உடைய பாம்பு
வரி கொள் வெம் சிலை - கட்டு அமைந்த கொடிய வில்
வரி சிலை - கட்டு அமைந்த வில், அழகிய வில்
வரி நிழல் - புள்ளிகள் பொருந்திய நிழல், அழகிய நிழல்
வருட - தடவ
வரும் நீர் - வருகின்ற பிரளய கால வெள்ளம்
வரை - மலை
வரை செய் - மலைபோன்ற
வரை மழை - கல் மழை
வரை முழை - மலைக் குகை
வரையன் - பர்வதராஜன்
வல் - வலிமை, ஆற்றல், விரைவு
வல் ஆள் ஆகம் - வலிய ஆண்மை பொருந்திய மார்பு
வல் மகன் - வலிமையுடைய பிள்ளை
வல்லி - கொடி
வல் வினையார் - கொடிய பாவங்கள்
வலங் கொள்தல் - வலமாக வருதல்
வலங் கொள் தொண்டர் - வலம் வருகின்ற அடியார்கள்
வலம் - பலம், வலிமை, சக்தி
வலவன் - வலக் கையிலே கொண்டவன்
வலவைப் பெண் - வஞ்சகத்தையுடைய பெண்
வலி செய்வது - துன்புறுத்துவது
வவ்வி - பற்றி
வவ்வுதல் - அபகரித்தல்
வள் - கூர்மை
வள்ளி - கொடி, வள்ளிக் கொடி
வள்ளி கொழுநன் - வள்ளிக்கு நாயகனாகிய முருகன்
வளர்ந்தவன் - திருக்கண் வளர்ந்தவன்
வளை - சங்கு
வளை கொண்ட வண்ணத்தான் - சங்கு போல் வெண்மை நிறமுடைய பலராமன்
வளைத்து வைத்தேன் - தடையிட்டு வைத்தேன்
வளை நெக - வளை கழலும்படி
வளை வணர்-சங்கு போன்ற நிறமுடைய பலதேவர்
வற்பு - வலிமை, மிடுக்கு
வற்றா முதுநீர் - வற்றாத பழைய நீராகிய கடல்
வன் சொல் - உறுதிப்பாடு உடைய வேதம்
வனம் - வனப்பு, அழகு, காடு
வன மாலை - திருத்துழாய் மாலை, காட்டிலே பூப் பறித்துக் கட்டிய மாலை

வா

வாங்கி - பறித்து
வாசி வல்லீர் - தாரதம்மியம் அறிய வல்லீர்
வாத மா மகன் - வாயுவினுடைய சிறந்த மகன், அனுமான்
வாதை - துன்பம், நலிவு
வாம் பரி - தாவி வரும் குதிரைகள்
வாம் மான் - தாவி ஓடும் குதிரை
வாய் - வழி, வாசல்
வாய்த்த - கிடைத்த
வாய்மை - வேதம், உண்மை
வாய் மொழி - வாய்ச் சொல்
வாய் வெருவுதல் - வாய் பிதற்றுதல்

வாயில் ஒட்டி - சபதம் செய்து
வார் - கச்சு, நீண்ட, பெரிய, ஒழுகுகிற, சிந்துகிற
வார் ஆளும் - கச்சு அணிந்த
வார் பனி - மிக்க பனி
வார் புறவு - அகன்ற தோட்டம்
வார் புனல் - மிக்க நீர்வளம், ஒழுகுகின்ற நீர்
வாரணம் - யானை
வாரம் ஓதுதல் - உருச் சொல்லிக் கொண்டிருத்தல், வேதச் சந்தை சொல்லுதல்
வாரியும் - எடுத்துச் சென்றும்
வாவி - குளம், பொய்கை
வாழ் முதல் - வாழ்வுக்குக் காரணமானவன்
வாழகில்லா - வாழாத
வாள் - ஒளி
வாளா - வீணாக
வாளி - அம்பு
வாளை - ஒருவகை மீன்
வாளை ஆர் - வாளை மீனை ஒத்த
வான் - ஆகாயம்
வான் உலகு - பரமபதம்
வான் உளார் அவரை - தேவ லோகத்திலுள்ள தேவர்களை
வானகச் சோலை - ஆகாயம் அளவாக ஓங்கி வளர்ந்த சோலை
வானரம் - குரங்கு
வானவன் - நித்திய சூரிகளுக்குத் தலைவன்

வி

விகிர்தம் - வேறுபாடு
விகிர்த மாதர் - சாதாரண மகளிரைப் போலன்றிச் சிறப்புத் தன்மையுடைய மகளிர்
விகிர்தன் - விநோதமான செயல்களை உடையவன், வேறுபட்ட தன்மையை உடையவன்
விச்சை - வித்தை
விசயன் - அருச்சனன்
விசிறி - வீசி எறிந்து, வீசி
விசும்பு - ஆகாயம்
விசை - வேகம்
விசைத்தானை - சுழற்றியவனை, வேகமாகச் செலுத்தியவனை
விஞ்சை வானவர் - வித்தியாதரர்
விடம் - விஷம்
விடை மணி - காளைகளின் கழுத்தில் கட்டப்பட்ட மணிகள்
விடை - காளை
விடையான் - காளை வாகனத்தையுடைய சிவபெருமான்
விண் - ஆகாசம்
விண்ட - மலர்ந்த, பிளவு பட்ட, பகைவராகிய
விண்டவர் - பகைவர்
விண்டார் - பகைவர்
விண்டு - விஷ்ணு, விரிந்து, வியாபித்து
விண்டு அலர் - விட்டு அலர்ந்த
விண்டு அலற - வாய் விட்டு அலற
விண்ணகர் - திருவிண்ணகர் என்னும் திருப்பதி
வித்தகன் - சதுரப்பாடு உடையவன்
வித்தும் - விதைக்கும்
விதலை - துன்பம், நடுக்கம்
விதி - நிச்சயம், திண்ணம்
விதிர் விதிர்த்தல் - நடுங்குதல்
விந்தை - விந்திய மலை
விம்ம - பெருக
வியந்துதி செய்ய - வியந்து துதி செய்ய, ஆச்சரியப்பட்டுத் தோத்திரம் செய்ய
வியம் - வேறுபாடு, சிறப்பு, ஏவல்
வியன் - பெரிய
வியன் கலை எண் தோளினள் - பெரிய மானை வாகனமாக உடைய எட்டுத் தோள்களையுடைய துர்க்கை
விரவுதல் - கலத்தல், பொருந்துதல்
விரி கதிர் இரிய நின்ற - சூரியன் ஒளி தெரியாதபடி இருந்த
விருத்தன் - தலைவன், நாயகன்
விரை - வாசனையுள்ள சந்தனம் முதலிய பொருள்கள்
வில்லாளி - வில்லையுடையவன்
வில்லி - வில்லை உடையவன்
விலங்கல் - மலை
விலங்கில் - நீங்கினால்

விலங்கு - மிருகம், மான்
விலை ஆளா - விற்றுக் கொள்ளத் தக்க அடிமையாக
விழவு - திருவிழா, வைதிக ஸமாராதனை
விழுது - வெண்ணெய்
விழுமிய - சிறந்த
விள்ள - பிளவு பட
விள்ளும் வகை - நீங்கும் வழியை, திருந்தும்படி
'விளங் கனி - விளாம் பழம்
விளிந்தியந்த - தள்ளப்பட்டு அழிந்து போன
விளியா - கூக்குரலிட்டு, கோபித்துப் பேசி
விறல் - வலிமை
வினவுதல் - ஆராய்ந்தறிதல்

## வீ

வீட்டீர் - விட்டீர்
வீய - அழிய
வீவு - அழிவு
வீழ் பொருள் - நிலையில்லாத செல்வம், இழந்த செல்வம், விரும்பப்படும் செல்வம்

## வெ

வெகுளாது - கோபம் கொள்ளாது
வெவ் - கொடிய
வெட்டென்றிருந்தான் - இசைந்திருந்தான்
வெண்ணி - ஓர் ஊர்
வெண் பகடு - வெள்ளை யானை, ஐராவதம்
வெதிர் - மூங்கில்
வெம் சொல் - விரும்பத் தக்க சொல்
வெம்பு சினம் - மிக்க கோபம்
வெய்ய விழு நிதி - நன்முகக் காய்ச்சிய சிறந்த பொன்
வெய்யன் - கொடியன்
வெயில் விரித்தல் - ஒளி வீசுதல்
வெருக் கொள - அச்சம் கொள்ள
வெருவா - அஞ்ச, நடுங்க
வெருவருதல் - அஞ்சுதல்
வெருவுதல் - அஞ்சுதல்
வெள்கி - மனம் ஈடுபட்டு
வெள்ளியார் - சத்துவ குணம் படைத்தவர்கள், சுக்கிரன், வெள்ளிமலையை யுடைய ருத்திரன், சிவனை வழிபடுகின்ற பாசுபதர்
வெள்ளியான் - வெண்மை நிறத்தை உடையவன்
வெள்ளியீர் - ஒரு குற்றமும் இல்லாதீர், சுத்தமான சுபாவத்தை உடையீர்
வெள்ளை நீர் வெள்ளம் - திருப்பாற்கடல்
வெள்ளை வெள்ளம் - பாற்கடல்
வெற்பு - மலை
வெறி - நறு மணம், வாசனை
வெறிய அவர் - ஆயுதங்களைப் போட்டு விட்டுத் தனியாக நின்ற அவர்
வென்றி - வெற்றி

## வே

வேங்கை - வேங்கைப் புலி, வேங்கை மரம்
வேட்கை - ஆசை
வேட்டத்தை - விரும்பியதை, ஆசைகளை
வேடு - வேடர்கள்
வேண்டுதல் - விரும்புதல்
வேண்டேன் - விரும்பேன்
வேத வாய் மொழி அந்தணன் - வேத பாராயணன்
வேதனை - துன்பம்
வேதா - வேதங்களால் உணர்த்தப்படுபவனே
வேதியன் - வேதத்தால் அறியப்படுபவன்
வேந்தன் - அரசன்
வேய் - மூங்கில்
வேய்கள் படு முத்தம் - மூங்கிலிலிருந்து உண்டாகிற முத்துக்கள்
வேய்ங் கழை - குழல் மூங்கில், உள் துளை பெரிதாகவுள்ள மூங்கில்
வேய்ந்து - மூடி
வேரி - தேன்
வேலை - கடல், கரை
வேலைக் கடல் - கரையை உடைய கடல்
வேழம் - யானை

வேள் - மன்மதன், முருகவேள், அரசன்

வேள்வி - யாகம், நைமித்திக கர்மம்

வேள்வு - வேள்வி, யாகம், நித்யோத் ஸவம்

வேற்ருன் - பகைவன்

வேரு - தனியாக, சிறப்பாக

வேருக - சிறப்பாக

வேறு வேறு உக - தனித் தனியே அற்று விழ

வை

வை - கூர்மை

வைகி - தங்கி

வைதேவி - சீதாப் பிராட்டி

வையம் - பூமி, உலகம்

ஸ்ரீ:

## மங்களாசாஸனம் செய்தருளிய திருப்பதிகள்

| | திருப்பதிகள் | | பாசுர எண் |
|---|---|---|---|
| 1. | சிங்கவேழ்குன்றம் | ... | 1008-1017 |
| 2. | சிறுபுலியூர்ச் சலசயனம் | ... | 1628-1637 |
| 3. | தஞ்சை மா மணிக் கோயில் (தஞ்சை ஆளி) | ... | 953, 1090, 1576 |
| 4. | தலைச் சங்கம் | ... | 1736 |
| 5. | திரு ஊரகம் | ... | 2059, 2064 |
| 6. | திரு எவ்வுளூர் | ... | 1058-1067 |
| 7. | திருக் கச்சி | ... | 1130, 1541, 2050, 2060, 2066 |
| 8. | திருக்கடல்மல்லை | ... | 1088-1107, 1195, 1551, 2050, 2060 |
| 9. | திருக் கடிகை | ... | 1731, 1736 |
| 10. | திருக் கண்டியூர் | ... | 2050 |
| 11. | திருக்கண்ணங்குடி | ... | 1748-1757 |
| 12. | திருக்கண்ணபுரம் | ... | 1648-1747, 2067, 2078 |
| 13. | திருக்கண்ணமங்கை | ... | 1638-1647, 1848, 2008 |
| 14. | திருக் காம்பனூர் | ... | 1399 |
| 15. | திருக் கள்வனூர் | ... | 2059 |
| 16. | திருக் கார்வானம் | ... | 2059 |
| 17. | திருக் காரகம் | ... | 2059 |
| 18. | திருக் காழிச் சீராம விண்ணகரம் | ... | 1178-1187 |
| 19. | திருக் குடந்தை | ... | 949, 954, 991, 1078, 1202, 1205, 1394, 1526, 1538, 1570, 1606, 1732, 1759, 1853, 1949, 1975, 2010, 2037, 2045, 2068, 2070, 2080 |
| 20. | திருக்குறுங்குடி | ... | 1005, 1399, 1470, 1788-1807, 2065 |
| 21. | திருக்கூடலூர் | ... | 1358-1367 |
| 22. | திருக்கோட்டியூர் | ... | 1550, 1838-1847, 1856 |

| | திருப்பதிகள் | | பாசுர எண் |
|---|---|---|---|
| 23. | திருக்கோவலூர் | ... | 1078, 1138-1147, 1569, 1641, 2057, 2058, 2068 |
| 24. | திருச்சாளக்கிராமம் | ... | 988-997 |
| 25. | திருச்சேறை | ... | 1578-1587 |
| 26. | திருத் தண்கா | ... | 1849, 2065 |
| 27. | திருத்தண்கால் | ... | 1399, 2068 |
| 28. | திருநந்திபுரவிண்ணகரம் | ... | 1438-1447 |
| 29. | திருநறையூர் | ... | 1078, 1329, 1470, 1478-1577, 1611, 1659, 1852, 2067, 2068 |
| 30. | திருநாகை | ... | 1758-1767 |
| 31. | திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் | ... | 1238-1247 |
| 32. | திருநாங்கூர்க் காவளம்பாடி | ... | 1298-1307 |
| 33. | திருநாங்கூர்ச் செம்பொன் செய்கோயில் | ... | 1268-1277 |
| 34. | திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலம் | ... | 1278-1287 |
| 35. | திருநாங்கூர்த் திருத்தேவனார் தொகை | ... | 1248-1257 |
| 36. | திருநாங்கூர்த் திருமணிக் கூடம் | ... | 1288 1297 |
| 37. | திருநாங்கூர்த் திருவெள்ளக் குளம் | ... | 1308-1317 |
| 38. | திருநாங்கூர்ப் பார்த்தன் பள்ளி | ... | 1318-1327 |
| 39. | திருநாங்கூர் மணிமாடக் கோயில் | ... | 1218-1227, 1850 |
| 40. | திருநாங்கூர் வண்புருடோத்தமம் | ... | 1258-1267 |
| 41. | திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் | ... | 1228-1237 |
| 42. | திரு நாவாய் | ... | 1520, 1856 |
| 43. | திரு நின்றவூர் | ... | 1089, 1642 |
| 44. | திருநீர்மலை | ... | 1078-1087, 1115, 1521, 1554, 1660, 1765, 1848, 2069 |

| திருப்பதிகள் | | பாசுர எண் |
|---|---|---|
| 45. திருப்பாமேச்சுரவிண்ணகரம் | ... | 1128-1137 |
| 46. திருப் பாற்கடல் | ... | 1003, 1006, 1019, 1341, 1347, 1398, 1618, 1744, 1828, 2060, 2066 |
| 47. திருப்பிரிதி | ... | 958-967 |
| 48. திருப்புட்குழி | ... | 1115 |
| 49. திருப்புல்லாணி | ... | 1768-1787 |
| 50. திருப்புள்ளம்பூதங்குடி | ... | 1348-1357 |
| 51. திருப்பேர் நகர் | ... | 1428-1437, 1851, 1857, 2048, 2050, 2059, 2060, 2070 |
| 52. திருமாலிருஞ்சோலை | ... | 1022, 1114, 1329, 1573, 1634, 1760, 1765, 1818-1837, 1855, 1969, 2020, 2034 |
| 53. திருமூழிக்களம் | ... | 1553, 2061 |
| 54. திருமெய்யம் | ... | 1206, 1524, 1660, 1760, 1852, 2016, 2050 |
| 55. திருவதரி ஆச்சிரமம் | ... | 968-987 |
| 56. திருவட்டபுயகரம் | ... | 1118-1127 |
| 57. திருவயிந்திரபுரம் | ... | 1148-1157 |
| 58. திருவயோத்தி | ... | 1875 |
| 59. திருவரங்கம் | ... | 1019, 1213, 1378-1427, 1506, 1571, 1664, 1829, 1978, 2029, 2038, 2043, 2044, 2050, 2062, 2063, 2065, 2069, 2070, 2076 |
| 60. திருவல்லவாழ் | ... | 1808-1817 |
| 61. திருவல்லிக்கேணி | ... | 1068-1077 |
| 62. திருவழுந்தூர் | ... | 1588-1627, 1854, 2066, 2077 |
| 63. திருவாய்ப்பாடி | ... | 1021, 1392, 1435, 1993-1995 |
| 64. திருவாலி | ... | 1078, 1188-1217, 1329, 1519, 1733, 1735, 1850, 2014, 2027, 2063, 2073 |
| 65. திருவிடவெந்தை | ... | 1021, 1108-1117 |
| 66. திருவிண்ணகர் | ... | 1448-1477, 1855, 2080 |
| 67. திருவிந்தளூர் | ... | 1328-1337 |

| திருப்பதிகள் | | பாசுர எண் |
|---|---|---|
| 68. திருவெஃகா | ... | 1854, 2059, 2064, 2065 |
| 69. திருவெள்ளறை | ... | 1368-1377, 1851 |
| 70. திருவெள்ளியங்குடி | ... | 1338-1347 |
| 71. திருவேங்கடம் | ... | 1018-1057, 1275, 1312, 1371, 1388, 1404, 1518, 1572, 1640, 1660, 1811, 1836, 1849, 1946, 1978, 2001, 2038, 2059, 2060, 2067 |
| 72. தில்லைத் திருச்சித்திரகூடம் | ... | 1158-1177 |
| 73. துவாரகை | ... | 1504, 1524 |
| 74. நிலாத்திங்கள்துண்டம் | ... | 2059 |
| 75. நீரகம் | ... | 2059 |
| 76. நைமிசாரணியம் | ... | 998-1007 |
| 77. பரமபதம் | ... | 2042 |
| 78. பவள வண்ணம் | ... | 2060 |
| 79. பாடகம் | ... | 1541 |
| 80. வட மதுரை | ... | 1512, 1527, 1833 |

ஸ்ரீ:

# பாடல் முதற்குறிப்பு அகராதி